REGD. No. M. 1190.







# ஆனந்த போதினி

# ANANDA BODHINI.

**Vol. 29.** பொருளடக்கம். **No. 5.**

சுபானு௵ கார்த்திகைமீ ௧௨

உள்ளடக்கம். பக்கம்.



1943







சே. இராஜு செட்டியார், எம். பி., பி. ஐ., அவர்கள் இயற்றியவை.

## காதலி? ஒரு இனிய அருமையான தமிழ் நாவல்

இதில் நவீன நாகரீகம், காதலின் வெற்றி, 'அவனன்றி ஓரணுவும் அசையாது', 'விதியின் வலி' என்னும் பல உயரிய நீதிகள், செல்வர்களின் ஆடம்பர வாழ்க்கை, சீர்திருத்தத்தின் சீர்கேடு ஆகிய பல அரிய அறிவைப் புகட்டும் அதியற்புத விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. **விலை ரூபா 0-12-0**

## நாகரீகம்?

'நாகரீகம்' என்ற உயர்ந்த பெயரை வைத்துக்கொண்டு இக்காலத்து நடைபெறும் பல போலி வழக்க ஒழுக்கங்களின் சீர்கேடுகளை ஒழிக்கவும், நீதியும், உண்மையும், அன்பும் நிலைகுலைந்து, மூலை முடுக்குகளில் தேங்கிக் கிடக்க, அநீதியும் பொய்யும் கொடுமையும் ஒருங்கு திரண்டு கரைகடந்து பெருகி வரும் பெரு வெள்ளத்தைத் தடுக்கும் அணைக்கட்டாக இந்நாவல் வரையப் பட்டது. இதில் உள்ளதை உள்ளபடியே எடுத்துக்காட்டி இந்தியர் எல்லோரும் ஒன்று சேர்ந்து அன்புடன் வாழ வேண்டுமென்று அரும் பெரும் நீதிகளடங்க பலதிறத்து மனிதர்களின் சுபாவத்தையும் போக்கையும் விளக்கிக் காட்டப்பட்டிருக்கிறது; இதில் ஜாதி சமூக கட்டுப்பாடுகளின் ஊழல்களும், ஆப்தமித்ரனின் அருங்குணங்களும், கருத்தொருமித்த காதலர்களின் அந்தரங்கப் பிணைப்பும், மோசக்காரர்கள் இறுதியில் நாசமுறுவதும், பல அத்தாட்சிகளோடு எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. இதை எல்லாரும் வாசித்து நற்பயனடைந்து இன்புறுவார்களாக. **விலை ரூபா 2-0-0**

## அன்பானந்தன் அல்லது அருஞ்செல்வன் விழைந்த பெருஞ்செல்வம்

இந்நூலின் கதாநாயகன் பெயரே இந்நூற்கும் பெயராய் அமைந்தது. **அன்பானந்தன்** என்னும் பெயரால் இரண்டு உண்மைகள் அறியலாகும்; அன்பு, ஆனந்தத்தில் முடிந்து அதனோடு ஒன்றாகி விளங்கும் என்பதொன்று; மற்றொன்று இந்நூல் எந்தப் பாஷையில் எழுதப் பட்டுள்ளதோ, எந்தப் பாஷை நமக்குத் தாய்ப்பாஷையாக வுள்ளதோ, அந்தப் பாஷையின் பெருமை இப்படிப் பட்டதென்பது. தமிழ் என்னும் சொல்லே இனிமை என்று பொருள் படும். அன்பைவிட இனிமையுள்ளது வேறில்லை. இவ்வன்பும் அவ்வினிமையும் கலந்தால் ஆனந்தம் பிறக்கத் தடையென்ன? இந்த ஆனந்தம் தமிழ்பாஷை முழுவதும் நிரம்பி யிருக்கிறது என்பதைக் குறிப்பிக்கவே, தமிழ் எழுத்துக்களின் முதலெழுத்தாகிய 'அ' என்பதும், இறுதி எழுத்தாகிய 'ன்' என்பதும் இந்நூற் பெயர்க்கு முதலும் இறுதியுமாக அமைந்தன. **இதன் விலை ரூபா 1-4-0**

## சந்திரசேகரி

எளிய, இனிய நடையில் எழுதப்பட்டது. உலகானுபவமும் இலக்கண அறிவும் விசேஷமாகக் கொண்டது; அன்பின் மகிமை, பொறுமையின் பெருமை, கேடு நினைப்போர் கெடுவர், கடவுளை நம்பினோர் கைவிடப்படார் முதலிய பல அரிய விஷயங்கள் இதில் விளக்கமாகவும் படிப்போர் மனதைக் கவரக்கூடியதாகவும் எழுதப்பட்டிருக்கிறது. **இதன் விலை ரூபா 1-4-0**

---

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.

ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."—திருவள்ளுவர்.

| | | |
|---|---|---|
| தொகுதி 29 | சுபாநு௵ கார்த்திகைமீ கவ 1943௵ நவம்பர்மீ 16உ | பகுதி 5 |


## கடவுள் வணக்கம்.

வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் வினைக்கேடன் என்பாய் போல
இனையன்நான் என்றுஉன்னை அறிவித்து என்னை
ஆட்கொண்டுஎம் பிரானானாய்க்கு இரும்பின் பாவை
அனையநான் பாடேன்நின்று ஆடேன் அந்தோ!
அலறிடேன் உலறிடேன் ஆவி சோரேன்
முனைவனே முறையோ நான் ஆனவாறு
முடிவறியேன் முதல்அந்தம் ஆயினானே. (1)

சிந்தனைநின் தனக்குஆக்கி நாயி னேன்தன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக்கு ஆக்கி
வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி வாக்குஉன்
மணிவார்த்தைக்கு ஆக்கிஐம் புலன்கள் ஆர
வந்தனைஆட் கொண்டுஉள்ளே புகுந்த விச்சை
மால்அமுதப் பெருங்கடலே மலையே உன்னைத்
தந்தனைசெந் தாமரைக்காடு அனைய மேனித்
தனிச்சுடரே இரண்டும்இலித் தனிய னேற்கே. (2)

தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையால் எற்றுண்டு பற்றுஒன்று இன்றிக்
கனியைநேர் துவர்வாயார் என்னுங் காலால்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்டு
இனிஎன்னே உய்யும்ஆறு என்றுஎன்று எண்ணி
அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே முதல்அந்தம் இல்லா மல்லல்
கரைகாட்டி ஆட்கொண்டாய் மூர்க்க னேற்கே. (3)



## உலக வாழ்வில் ஒளி உண்டாகுமா?

உலகம் இன்று ஒரு பெருங் குரு க்ஷேத்திரமாய் இருக்கிறது. எங்கு பார்த்தாலும் போர்! போர்!! போர்!!! எல்லாம் போர் மயமாகவே இருக்கிறது. யுத்த அந்தகாரம் உலக முழுவதையுமே கவிந் திருக்கிறது. மனித வாழ்வில்தான் சதா வாழ்க்கைப் போர் நடந்துகொண்டு வருகிறதென்றால், வெளி முகத்திலும் மனித சாதிக்குச் சாதி, தேசத்துக்குத் தேசம் சண்டை நடந்து கொண்டு வருகின்றது. அறியாமை இருள், வறுமை இருள், அதிகார ஆணவ இருள், நாடாசை இருள் முதலிய பலவிதமான அந்தகாரங்களும் சேர்ந்து உலகையே அந்தகார அடவியாக ஆக்கி வைத்திருக்கின்றன. அவை மனித உள்ளங்களையே இருட் பிழம்பில் தோய வைத்திருக்கின்றன. இவ்வித இருட் கூட்டத்தில் சிக்கித் தான் மக்கள் மனக் கண்ணொளியையும், அறிவொளியையும் இழந்து நன்னெறி தவறி—சன்மார்க்கத்தை விட்டு, துன்மார்க்கத்தில் சென்று பாவப்படுகுழியில் விழுந்து இடர்ப்பட்டு மீளா நரகிற்கே ஆளாகின்றனர். மூட உலகமும் எங்கேயோ உருண்டோடி இருட்கடலில் விழுந்து தலை யெடுக்க மாட்டாது தவிக்கின்றது. இதற்கு முன்பு இத்தகைய நிலைமை ஏற்படும் போதெல்லாம் கருணையே ஓருருவான இறைவன் தன் அருள் ஒளியைக் காட்டி, உலகையும் மக்களையும் மேற்குறித்த இருட் கூட்டத்தி லிருந்து மீட்டு விடுதலை வழங்குவது வழக்கம். ஆண்டவனது இவ்வித அருள் திருவிளையாடல்களைத்தான் நம் முன்னோர்கள் சாதாரண அறிவுடைய மக்களும் அறிந்து உய்வதற்காக புராணங்களாகவும் இதிகாசங்களாகவும் எழுதி வைத்திருக்கிறார்கள்; இத் தத்துவ உண்மையை உணராது, மக்கள் அவைகளைச் சாதாரண கதைக

ளாக மதித்துக் குதர்க்கமாகக் கேள்விகள் கேட்டு மயங்குகின்றனர்.

* * * *

உதாரணமாக, 'கார்த்திகை தீபம்' என்னும் நமது பண்டிகை வரலாற்றை எடுத்துக் கொள்வோம். ஒரு காலத்தில மக்களேயும் தேவர்களேயும் அறியாமை இருளும் ஆணவ இருளும் ஆதிக்கங்கொண்டு அலேக்கழித்து வந்தன. இவை மும்மூர்த்திகளில் இருவரான மகாவிஷ்ணுவையும் பிரம்மாவையும் கூட பற்றிக்கொண்டு ஆட்டி வைத்தனவாம். ஆகவே, அவர்கள் 'எல்லாம் வல்ல முழுமுதற் பெருங் கடவுளே ஞானக் கண்களால் தான் காண முடியும்; அன்பு (பக்தி) வலேயில் தான் அகப்படுத்த முடியும்' என்று உணராது, 'இதோ பார்; நான் இறைவனேக் கண்டு பிடித்துக் காட்டுகிறேன்?' என்று சபதங் கூறி மூவுலகிலும் தேடலானுர்கள். 'நான் தான் பெரியவன்? உன்னேவிட நான்தான் பெரியவன்' என்று ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக்கொண்ட அவர்கள் பரம்பொருளேத் தங்களில் யார் முதலில் காண்கிருரோ அவரே பெரியவர்' என்று சூள் செய்து கொண்டார்களாம். அதன்படி, திருமால் வராகமாக மாறி, பாதாளத்தை, அகழ்ந்து கொண்டும், பிரம்மன் அன்னப்பறவையாக உருவெடுத்து ஆகாயத்தில் பறந்து சென்றும் இறைவனேத் தேடிச் சென்ருர்களாம். 'அங்கு இங்கு எனுதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்த தாகவும், 'நீக்கமற எங்கும் நிறைந் திருப்ப'தாகவும் உள்ள ஆண்டவன் தங்களுக்குள்ளும் அந்தர்யாமியாய் இருக்கிருன் என்ற உண்மையையுணராத அவர்களின் ஆணவக் கண்களுக்குக் கருணுமூர்த்தி எப்படிக் காட்சி யளிப்பான்?

"ஒருத்தனே! உனே உலகெலாம் தேடியும் காணேன்!"

என்று மாணிக்கவாசகப் பெருந்தகையார் கூறியதுபோல், திருமாலும் அயனும் முழுமுதற் பொருளே எங்கும் தேடிக் காணுது அலுத்துப் போனுர்கள். ஆனுல், பிரம்மனுக்கு ஒரு யுக்தி தோன்றியது. 'நான் கடவுளேக் கண்டு பிடித்து விட்டேன்' என்று பொய் கூறி விஷ்ணுவை ஏமாற்றி அவனினும் தான் பெரியவனுய் விடலாம் என்று எண்ணினுன். அதற்கேற்ப, அவன் சிற கொடிந்து கீழிறங்கி வருகையில், ஆண்டவன் திரு முடியி லிருந்து விழுந்த தாழம்பூ கீழ் நோக்கி வருவதைக் கண்டு, தன் கூற்றுக்குச் சாட்சியாக இருக்குமாறு அதைக் கேட்டுக் கொண்டானும். கீழே வந்ததும், பிரம்மன் பாதாள முழுதும் தோண்டிக் கிளறிக் கிளறிப் பார்த்துப் பய

னில்லாது பூமிமேலே வந்து அலுத்து உட்கார்ந்திருந்த திருமாலைப் பார்த்து, 'நான் ஆண்டவனைக் கண்டு பிடித்து விட்டேன், நான் அவனை இக் கண்களால் கண்டு மகிழ்ந்ததை அதன் முடி மீதிருந்து வரும் இந்தத் தாழம் பூவை வேண்டுமானால், கேட்டுப் பார்' என்று சாதுர்யத்தோடு பொய்கூறிச் சாதித்தான். 'ஆதலால், உன்னைவிட நானே பெரியவன்' என்று கூறிக் கூத்தாடினான். இந் நிலையில் தான், சிவபெருமான் சோதி ரூபமாய்த் தோன்றிப் பிரம்மனுக்கும் திருமாலுக்கும் அறிவொளி யுண்டாகச் செய்து ஆட்கொண்டான் என்று புராணங்கள் விவரிக்கின்றன.

இப் புராண சித்திரத்தையே, சைவ-எல்லப்ப நாவலர் என்னும் பெரியார்,

"மணிகொண்ட நெடுங்கடலில் விழிவளரும் மாதவனும்
அணிகொண்ட புண்டரிகம் அகலாத சதுமுகனும்
ஞானக்கண் ணதுகொண்டு நாடுமாறு உணராதே
ஏனத்தின் வடிவாகி எகினத்தின் வடிவாகி
அடிதேடி அறிவில்என அவனியெலாம் முழுது இடந்தும்
முடிதேடி வருவல்என மூதண்ட மிசைப்பறந்தும்
காணரிய ஒருபொருளாய்க் களங்கமற விளங்குபெருஞ்
சோணகிரி எனநிறைந்த சுடரொளியாய் நின்று அருள்வோய்."

என்று வெகு அழகாகத் தீட்டியிருப்பது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. இவ்விதம் ஆண்டவன் தாணு ரூபமாய்—அழல் பிழம்பாய் நின்ற நிலையையே—திருவண்ணாமலையாகச் சித்திரித்திருக்கிறார்கள். 'நினைத்த மாத்திரத்தில் முத்திப் பேற்றை வழங்க வல்லது' என வருணிக்கப்படும் இத் திருவண்ணாமலையில் ஆண்டுதோறும் கார்த்திகை மாதம் கிருத்திகைத் திருநாளில் நிகழும் தீபமேற்றலே—மேற்குறித்த திருமால், அயன் அடிமுடி தேடிய வரலாற்றைக் குறிக்கும் சின்னமாகக் கருதப்பட்டு வருகிறது. **கார்த்திகை தீபம்** என்னும் திருநாளின் தத்துவம் இதுதான் என்பதைப் பலர் அறிந்திருக்க மாட்டார்கள். இக்கார்த்திகை தீபத்தின் விசேஷத்தையும் மகத்துவத்தையும் முன்னிட்டே, கார்த்திகை மாத முழுவதும் வரும் திங்கள் கிழமைகளை ஈஸ்வரனை நோக்கி இருக்கும் விரத நாட்களாகக் கொண்டு சோமவார **விரதம்** என்று நம் நாட்டு மக்கள்—முக்கியமாக மகளிர்—விரத மனுஷ்டித்து தங்கள் இஷ்ட சித்திகளைப் பெற்று வருகிறார்கள்.

* * * *

இன்று உலக மக்களிடையே அஞ்ஞான இருளும் ஆணவ இருளும் பரவி மிகவும் ஆதிக்கம் பெற்றிருக்கின்றன. உலகம்

உண்மை இன்ன தென்று அறியாமல், பொய்மை யிருளில் புரள்கிறது. தற்போது கலை, நாகரிகங்களில் சிறந்து விளங்கு பவர்கள் என்று பெருமை பேசிப் பறையடித்துக் கொள்ளும் மேனாட்டினரிடையேதாம் சத்தியத்துக்கு மாறான காரியங் களும் ஆணவத்தின் பரிணாமங்களான கொடிய செயல்களும் மிகுந்திருக்கின்றன. அதிகாரத் திமிரினாலும் நாடாசை வெறி யினாலும் அந் நாட்டினர் ஒருவரோடொருவர் போர்புரிந்து வருகின்றனர். இவற்றின் பயனாக, ஏற்பட்டிருக்கும் மகா யுத்தம் உலகத்தையே இடுகாடாக ஆக்கி வருகிறது. உலக மக்களின் அமைதியான வாழ்வு குலைந்து வறுமையும் பஞ்ச மும் வாட்டி வருகின்றன. மகா யுத்தத்தினால் ஏற்பட் டிருக்கும் உலக நெருக்கடி நம் தேசத்திலும் எதிரொலி செய்து பயங்கரமான நிலையை உண்டு பண்ணி வருகிறது; யுத்த நெருக்கடியினால் மற்ற தேசங்களைவிட—யுத்தத்திலேயே நேரடியாக ஈடுபட்டுள்ள மற்ற நாடுகளைவிட—நம் நாடு மிகவும் பாதிக்கப்பட்டுப் பெருங் கஷ்டமும் நஷ்டமும் அடைந்து வருகிறது. பஞ்சமும் பசிப்பிணியும், மரண எண்ணிக்கையும் நாளுக்கு நாள் வளர்ந்து வருகிறதே யொழிய, குறைந்த பாடில்லை. இப் பரிதாப நிலைக்கு உடனடியாகப் பரிகாரந் தேட, அரசாங்கத்தாலோ, மற்றவர்களாலோ முடியவில்லை. சகல ஜீவராசிகளின் துன்பங்களையும் துடைத்து அருளும் ஆண் டவன்தான் கண் திறந்து நம்மை-நம் துயர நிலையை-ப் பார்த் தருள வேண்டும். அன்று பிரம விஷ்ணுக்களின் ஆணவத்தை யடக்கி அறியாமையைப் போக்கி, உண்மையான அறிவொளி புண்டாகச் செய்த பெருமான், இன்று தேசாதிபதிகளின் அதி காரத் திமிரையும், நாடாசை வெறியையும் போக்கி அவர்க ளுக்கு உண்மை யறிவொளி வழங்கி உலகில் நிரந்தரமான சமா தானத்தையும் சந்துஷ்டியையும் ஏற்படுத்துவானாக! உலக வாழ்வில் வறுமை யிருளில் சிக்கித் தவிக்கும் மக்களின் வாழ்க் கையில் இன்பவொளியை-பிரகாசத்தை-உண்டாக்குவானாக!



# "மாய மகளிரும்-தூய மகளிரும்"

(மா. அ. தேவராஜன்.)

"ஆனந்தபோதினி"யின் கட்டுரைகளில், "மகளிரைப் பழிப்பது தகுதியா?" என்னும் கட்டுரை என் சிந்தனையைத் தூண்டி இக் கட்டுரை எழுதக் காரண மாயிற்று. அதன் ஆசிரியர் அன்பர்-திரு. துரையவர்கள் சுமார் 10 யாண்டுகளாய் எதிர் பார்க்கும் விடை என் நினைவில் இருப்பதாயின் அதுவே என் சிந்தனையில் பெற்ற பயன் என்றமைவேன். நிற்க.

திரு. துரையவர்க்ள் செப்பிய எண்ணங்களில் முதற் பகுதி இன்றைய மூதறிஞர்களால் ஏற்றற் கொள்ளற் பாலதேயாம்.

மேல் நாட்டுப் பேரறிஞர் கார்லைல் அவர்கள் விரிவுரை ஒன்றிற் கூறி யாங்கு, வெவ்வேறு பால் ஆன ஆணையும் பெண்ணையும் ஒன்றென மதித்து ஏற்றத் தாழ்வு கற்பிக்க முற்படுவது, விரிவு இலா அறிவிஞர்கள் புரியும் செயலே யாகும். ஆண், ஆண் தன்மையிலும், பெண், பெண் தன்மையிலும் சிறந்ததே யாம். ஒன்று இன்றி மற்றொன்று அமையாது; ஒன்றில்லை எனில் உலகமே யில்லை. எப்படி, உடன் பாட்டு மின் ஒளியோ, எதிர் மறை மின்னொளியோ (Positive and Negative Currents) இன்றேல் மின்சாரம் விளங்காதோ அப்படி என்க. எனவே, ஆணுக்குப் பெண்ணோ, பெண்ணுக்கு ஆணோ அடிமையும் இல்லை; தலைமையும் இல்லை. இரண்டும் உலக அன்னையின் இரு கண்மணிகளே. ஆனால் *உடற்கூறு பாட்டினால், பெண்கள் ஒருவாற்றில் ஆண்களையும், ஆண்கள் ஒருவாற்றில் பெண்களையும் விஞ்சினவரே. எனினும், இவ் வொரு காரணம் கொண்டே ஆடவர் தம்மைத் தாமே ஆள முற்படாமல், பெண்களையே ஆள முற்படுவரேல் அன்னார் எத்துணைக் கற்றவராயினும், புகழ் பெற்றவராயினும் கேவலம் எளிய அன்றிற் பறவை ஆதியவற்றுக்கும் கிழானவரே என்பது திண்ணம். எப்படி மனைவியைக் கணவன் "வாழ்க்கைத் துணை" என்று சொல்லுகின்றானோ, அப்படியே, மனைவிக்குத் தானும் "வாழ்க்கைத் துணை" என்பதைக் கணவன் அறிந் தொழுகுவதே அறிவுடைமை யாகும். ஆகவே, ஆணை உயர்த்திப் பெண்களைப் பழிப்பது அடாத செயலாகும்.

எனினும், பெண்ணுலகிற்குள்ளே பலவித ஏற்றத் தாழ்வுகள் உண்டென்பது உண்மை.

பிறந்த—புகுந்த அகத்திற்கும் நாட்டிற்கும் நற்புகழ் கொண்டு வரும் நங்கையரும்—கண்ணகியரைப் போன்ற மறக் கற்பரசி

---

* **உடற் கூறு வேறுபாடாவன:**—பெண்டிற்கு ஆணைவிடக் கருப்பையின் அமைப்பும், மார்பகப் பொலிவும், மென்மைத்தன்மையும், அழகும், நீண்ட குழலும், ஆடவர்க்குப் பெண்ணைவிட வன்மையும், மீசையும், திரண்ட புயமும் பிறவும் வேறுபாடாகும்.

களும் உண்டு. மற்று, மேனி மினுக்கித் தகை செருக்கிப் பிறர் நெஞ்சிற் பேணிப் புணர்ந்து புன்னலம் பாரித்து அன்பின் விழையாது பொருள் விழைந்து பொய்யை மெய்யாக்கக் காட்டி வாழும் கணிகையர்க் கழிவடைகளும், 'ஏந்து எழில் மிக்கான், இளையான் ..............கேள் எனினும் 'அயலார் மேல் மன'மாகும் காமப் பேய் களும் உண்டு.

இவ் விரு திறப்பட்ட பெண்டிரையே ஆன்றோர் முறையே, "குலமகளிர், அருட் பெண்டிர், தூய மகளிர், பத்தினியர்" எனப் பலவாறும், "விலை மகளிர், பொருட் பெண்டிர், மாய மகளிர், பொது மகளிர்" எனப் பலவாறும் கூறுவர். இவருள், "தூய மகளிரை" உலகமே ஒருமுகமாகப் போற்றுகிறது என்பது, "பத்தினிப் பெண்டிற்கு உயர்ந்தோர் ஏத்தலும்........." என்ற இளங்கோவடிகள் இன்னுரையும், "கற்பு எனும் திண்மை யுண்டாகப் பெறின் பெண்ணிற் பெருந்தக்க யாவுள?" என்ற வள்ளுவர் வாயுறையுமே போதிய சான்றும்.

இத் தெய்வத் திறம் படைத்த செந்தமிழ் நங்கையர், எந்த நூலிலும் பழித்து உரைக்கப்பட வில்லை. நெஞ்சை அள்ளும் விஞ்சு புகழ்ச் சிலப்பதிகாரமே ஒரு கற்பரசியின் காரணமாய் எழுந்தது எனின், தூய மகளிரைப் பழிக்க எவரும் துணியார் என்பது ஒருதலை. தமிழகத்தின் தனிப் பண்பே, ஆணைத் தலைவன் என்றும் பெண்ணைத் தலைவி என்றுமே கூறுவது ஆதலின், மேற் கூறிய கற்பு என்னும் திண்மை இரு பாலார்க்குமே என்பதும் தெளிவு.

இனி மாய மகளிரைப் பற்றி உலக நூல்கள் யாவும் பலவாறு இழித்துப் பேசுகின்றன. காரணம், மாய மகளிரால் உலக சமுதாயமே ஒழுக்கம் பிழைத்து வழுக்கி விழுகிறது. ஆனால் மாய மகளிரைக் கண்டிப்பதில் மட்டுமே, நம் ஆன்றோர்கள் அமைதி கொள்கின்றனரே அன்றி, பன் மாயக் கள்ளப் பாதக ஆடவரைக் காமுகக் காதகரை யாண்டும் மிக வன்மையாகக் கண்டிக்கவில்லை. ஆயினும், நாம் அவரையும் மாய மகளிருடன் சேர்த்தே கண்டிப் போம்.

அன்பர் துரை யவர்கள் எழுப்பிய ஐய வினாக் கட்டுரையில் 'முற்பகுதி'க்குச் சான்றாக எழுதப் பெற்ற பிற்பகுதி வரலாறு, முன் பின் முரண்படுகிறது. எப்படி? மகளிரைப் பழிப்பது—தகுதியல்ல என்று கூறிப் பிற் பகுதியில் பொது மகளான பாஞ்சாலியைப் பழிப்பது மகளிரைப் பழிப்பதே என்று அவர் கொள்வது என் அறிவிற்குத் தகுதியாய்த் தோன்றவில்லை. ஏன் எனில், திரௌபதி கற்பரசி என்பதற்குப் பாரதத்தில் தகுந்த ஆதாரம் இல்லை. இதனைச் சற்றே விளக்கினால், அவர் தம் ஐயப் பாட்டிற்குத் தகுந்த விளக்கமும் அதன் வழிப் பெறப்படும். ஆதலின் பாஞ்சாலியின் வரலாற்றைச் சுருக்கி எழுதுவோம் :

"மூளார் அழல் உற்பவித்தாள் இவள்முற் பவத்தில்
நாளாயனி என்று உரைசால் பெருநாமம் மிக்காள்.
..................இறந்த பின்னும்..................
இந்திர சேனையாய் அந்தப் பதி யடைந்தாள்.
......அவன் (இந்திரன்) மேல் அவளாசை மிஞ்சி......
தவம்செய்தாள்......ஐந்தானனத்தோன் (சிவன்)
அருள்செய்ய, "ஐந்தானசொல்லால் கணவன் தருக..." என்றாள்.

இப்படி, ஐந்தான போகம் இவள் (நாளாயனி) எய்தியது அறிந்து ஈசன், ஐந்து இந்திரரை அவட்குக் கணவனாய் அளித்தான். அவர்களே பாண்டவர்கள். அந் நாளாயனியே பாஞ்சாலி யானாள். இதுவரையும் பாஞ்சாலியான நாளாயனி ஒழுக்கம் எப்படிப் பட்டது என்பதை வாசகரே உணர்ந்து கொள்ளலாம். இனிப் பாஞ்சாலியின் சுயம்வர மண்டபத்திற்கு வருவோம். வரிசையாக முடிசூடிய தார் மன்னர் பலர் வீற்றிருக்கின்றனர். ஒரு பெரிய நீண்ட வலிய வில் கிடக்கிறது. அதனை வளைத்து நாண் ஏற்றி வெல்பவன் யாவனே ஆயினும், "கலைவலீர், அவற்கே இந்தக் கன்னியும் உரியள்" என்று அறிவித்தான் திட்டத்துய்மன். பின் அவையோர் மணப் பெண்ணையும் மாவில்லையும் மாறி மாறி நினைத்து முயன்று தோற்கின்றனர்.

அன்பர்களே, இதுவரையும் கூர்ந்து நோக்குவோம். பெண்ணின் காதல் விருப்பம், பெற்றோர் சொற்படி நிகழ்வதன்று. யார் வில்லை வளைத்தாலும் அவருக்கு அவள் மனைவி. வெளிப்படையாய்ச் சொன்னால் அடிமை. இம்முறை, இயற்கையுணர்வால் கொடுப்பாரும், தடுப்பாரும் இன்றிச் செம்புலப் பெய்நீர் போல அன்புடைய நெஞ்சம் தாம் கலந்து காதல் நெறி பற்றிய தமிழர் தம் அக ஒழுக்கத்திற்கு முற்றும் புறம்பானது. இச் சுயம்வர நெறியால் ஒருத்தி, தன் நிறை காத்துக் கொள்ள முடியாது. கற்பு என்னும் திண்மை பெறாள். ஏன்? அவள் எண்ணத்திற்கு எதிராகவே மணவினை முடிவு நிகழ்கிறது. மற்றும், ஒரு பொதுமகளைக் கண்ட கண்டவர் சென்று இன்புற்று வருவது போல், பாஞ்சாலியைச் சபையில் வந்த 56 அரசர்களும் பிறரும் தத்தம் மனத்துள் ஆயிரம் மனக்கோட்டைகள் கட்டி அவளொடு உள்ளில் புணர்ந்து அவள் கன்னித் தன்மையைக் கரவாடினர். இம் முறையும் தமிழர் நெறிக்கு மாறானது. "கற்புடைப் பெண்டிர் பிறர் நெஞ்சு புகார்" என்பது தமிழ் மணிமேகலை.

"கொண்டோன் தனக்கொரு குற்றம் செய்திலேன்;
கண்டோர் நெஞ்சில் கரப்பளளி தாயினேன்"

என்று ஒரு தமிழ் மகள், தன்னைப் பிறன் ஒருவன் காம நினைவால் அடுத்த காலையில் வருந்துகிறாள். எனவே, இதுவரை பாஞ்சாலி, தமிழர் ஒழுக்கப்படி கற்புடையவளல்லள் என்பது வெளிப்

படை. மணம் ஆன பின்னரும் கூட, பாஞ்சாலி **சுயோதனன், சடாசுரன், கீசகன்** முதலிய பலர் தம் நெஞ்சில் உருப்பெற்று விட்டாள். இனி வடவர் ஒழுக்கப்படியேனும் பாஞ்சாலி கற்பு தவறு திருந்தனளா? என்று ஆராய்வோம்.

"பார்ப்பான் (பார்த்திபன்) வந்து ஒரு கோட்டியரசைச் சேரப் பரிவித்துப் பாஞ்சாலன் பயந்த......பாவை தன்னை வலியாற் கொண்டான்" ஆதலின், பாஞ்சாலி முறையாக அருச்சுனன் ஒருவனுக்கே மனைவியாக வேண்டியவள். இந்நெறி முறை யுணர்ந்தும், "தன்னிகர் இலாத கேள்வி சான்ற சீர்த்தருமன்" அன்னை தவறியதற்கு வருந்தும் போதும், "நின்சொல் ஆரணப் படியதாகும், நின்நினைவு அன்றால் **என் (எங்கள்) நெஞ்சிலும்** நினைவுண்டு" என்று ஒழுக்கயினனாய் உரைத்தும், பின், "கைவரு சிலையின் வென்று கைப் பிடித்தவனுக்கு இன்றே மைவரு கண்ணி" பாஞ்சாலியை, "வதுவை செய்திடுதும்" என்ற யாகசேனன் சொற்கும் நினைவுக்கும் எதிராய் அந்தத் தருமன் "யாங்கள் ஐவரும் (கள்ளவிழ் கூந்தலாளை) வேட்டு (த் தேவர் தெள்ளமிழ்து என்னச் சேர்ந்து அருந்துவோம்)" என்ற முறை கெட்ட வார்த்தைகளையும் நோக்கினால், தருமனே தன் தம்பியின் மனைவியைக் கற்பழிக்க முற்பட்டான் என்பதும், அதற்கு அருச்சுனன் இசைந்தான் என்பதும், திரௌபதியும் தன் கற்புநிலை கெடுவதும் நோக்காது மனம் ஒப்பியதும், இதற்கு முழுதுணர் ஞான வியாதன் துணைபுரிந்தான் என்பதும், பின்னரும், "சரி,க,ம,ப,த,நிப் பாடல் தண்டு தைவரும் செங்கை" நாரத முனிவரும் வந்து, சுந்தோப சுந்தர் கதையைக் கூறி, "நீவிரும் விதியால் வேட்ட நேயம் உண்டேனும், மன்றல் ஓவிய மனையாள் பாஞ்சாலியை, ஓர் ஓர் ஆண்டு, ஒருவராக மேவி நீர் (கலவி) புரியும்; அங்ஙன் மேவு நாள், ஏனையோர் இக்......... கண்ணினாளைக் காணில் ஓர் ஆறு இருதுவும் வேஷமாறிப் புண்ணியப் புனல்களாடப் போவதே உறுதி" என்று அமைதி கூறிய அழகினையும் நோக்கினால், பாஞ்சாலியைக் கற்புடைய பத்தினி என்று கூற யாரே முன்வருவர்?

மற்றும், திரௌபதி தன் கொண்கர்பால் எவ்விதம் ஒழுகினள்? என்பதும் ஈண்டு நோக்கத் தக்கது. "அந்தப் பொதுமகள் யாகசாலை நண்ணிய தவற்றாலோ, மற்றுத் தருமன் செய்த பாவத்தாலோ, தருமன், சூதாடித் தன் பொருள்களையும், தம்பியரையும், தன்னையும் முறையே தோற்றுப் பின்னிறுதியாய்த் தனக்கும் தன் தம்பியர்க்கும் பெண்டான பாஞ்சாலியையும் ஒருங்கு தோற்றனன். அதுபோழ்து, சுயோதனன், பாஞ்சாலியை அரசவைக்கு அழைத்து வரச் சொல்கிறான். தேர்ப்பாகன், உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைந்து, "வல்லி யிருந்துழி எய்துறாமல் இடைவழி நின்று மீள" விரைந்து ஓடிவந்து, துரியோதனனுக்குப் பாஞ்சாலியின் வாக்காக "என்னைத் தோற்று மனுநெறி கூர் இசையோன் தன்னைத் தோற்றனனோ? தன்னைத் தோற்றுத் தனது மனத்தளர்வால் 'என்னைத் தோற்றனனோ? முன்னைத்

தோற்றுத் தோற்ற பொருள் முற்றும் கவரும் முறையன்றிப் பின்னைத் தோற்ற பொருள் கவரப் பெறுமோ? நினைக்கப் பெருது" என்று கூறுகிருன்.

பின் துச்சாதனன் சென்று வீறுடன் பாஞ்சாலியைக் குழற் பற்றி அழைத்து வந்து அவையில் விட்ட பின்னும், "தலத்துக்கு இயையாது ஐவரையும் தழுவித் தழுவித் தனித்தனியே நலத்துப் பொய்யே மெய்போல நடிக்கும் செவ்வி நலன் உடைய" பாஞ்சாலி மீண்டும் மேற்கூறிய கேள்வியையே அவையோரை நோக்கிக் கேட்கின்ருள். இக் கேள்விக்குத் தக்க விடையை ஒருவரும் (விகர்ணன் ஒழித்து) ஒன்றும் சொல்லாது ஊமர் கணம்போல் இருக்கின்றனர்.

விகருணனின் வீண் வாதத்திற்கும், பாஞ்சாலியின் வாதத்திற்கும் சேர்ந்தாற்போல், அருக்கன் மகனுயவள்ளல் கன்னன் சரியான மாற்றம் கொடுத்து அவர் வாய்க்கு ஆப்பு அறைகிருன். அஃதாவது,"........தான் படைத்த பொருள் அனைத்தும் தம்பியர்கள் உடன் தோற்றுத் தனையும் தோற்ருன்; **மின் படைத்த மதி முகத்தாள் (பாஞ்சாலி) இவன் (தருமன்) படைத்தனம் (பொருள்) அன்றி வேறே கொல்லோ?** வான் படைத்த நெடும்புரிசை மாநகரும் தனது இல்லும் வழங்குமாயின் யான் படைத்த மொழியன்றே எங்கணும் இல் எனப் பட்டாள் இல்லாள் அன்ருே?..........மகிதலத்து வேந்தராகித் தொக்கோர் யான் நுவன்ற மொழிக்கு எதிர் மொழி யுண்டாமாகிற் சொல்லுவீரே!" என்பது கர்ணனின் வாதம். இவ் வாதத்தை யாரும் மறுக்கவில்லை. இதுவரை யுள்ள நிகழ்ச்சியினுல் பாஞ்சாலியின் ஒழுக்கத்தைக் கண்டோம்.

நம் தமிழகத்திலே, "தான் கொண்ட கணவற்கு உறும் குறை தாங்கி" அறக்கற்பில் நின்று, பின், தன் கணவன் கோவலன் "கள்ளன்" என்று குற்றஞ் சாட்டப்பெற்றுக் கொலைக்களத்தில் வெட்டுண்டது கேட்ட வீரபத்தினி கண்ணகி தேவியார்-கற்புக் கடவுள்-வெகுண்டு பாண்டியன் அவையேறி நீதியை நிலைநாட்டி மாதனிப் புகழ் ஈட்டி பாண்டியன் கொடுங்கோலையும், கோவலனுக்கு ஏற்பட்ட பழியையும் ஒருங்கே நீக்குகின்றனர். நம் பத்தினிக்கடவுளைப் போல், பாஞ்சாலியும் அவை ஏறி வழக்காடுகிருள். ஆனல் எதற்காக? தன் கணவர் ஐவரும் அரவக்கொடியோனுக்கு அடிமைகளாகியது அறிந்தும், அன்னுர் தன்னை அடிமையாக்கியது ஒரு குற்றம் என்று வழக்காடி, தனக்கு விடுதலை பெற்றுக்கொள்ள! அன்பரே, எண்ணிப் பாருங்கள்:

"தகாஅக் காலம் தலைப்படும் ஆயினும் பகாஅ வுள்ளமொடு" கணவனையே கடவுளாய் எண்ணி வாழ்விலும் தாழ்விலும் அவரொடு வாழ்வதாய்த் தீ முன்னர்ச் சூளுரைத்து மணந்த ஒருத்தி, தன் கணவன் பிறனுக்கு அடிமையாவதை—ஆனதை—நேரில் அறிந்தும், அதற்காக வருந்தாமல்-அவரை விடுவிக்கவும் முயலாமல்-தான் மட்டும் சுதந்திரம் பெற்று வாழ முயலுபவளை நீங்கள்

கற்புடையவள் என்று மதிக்கின்றீர்களா? வாழ்க்கைத்துணையாக வந்தவள் நட்டாற்றில் கைவிட்டுத் தான் துன்புறு வழி தேடுபவள் எப்படிப் பதிவிரதை யாவாள்? ஆய்ந்து பாருங்கள்.

இனி அன்பர் துரை கூறிய "ஐம்புலன்களும் போல் பதிகள் ஆகவும் இன்னம் வேறொருவன், எம்பெரும் கொழுநன் ஆவதற்கு உருகும்; இறைவனே எனது பேர் இதயம்; அம்புவிதனில் பெண் பிறந்தவர் எவர்க்கும் ஆட்வர் இலாமையின் அல்லால் நம்புதற்கு உளதோ?" என்றனள் வசிட்டன் நல்லற மனைவியே யனையாள்" என்ற வில்லிபாரதச் செய்யுளின் பொருளின் உண்மை யாதெனை நோக்குவோம்.

இப் பாவிற்குத் திரு. துரை அவர்கள் கொண்ட பொருளின் மேல் எழும் வினாக்களாவன:—

(1) பலராலும் விரும்பப்பட்ட பாஞ்சாலியைப் பத்தினி யாகிய வடமீன் (அருந்ததி) தனக்கு ஒப்பிடுவது சரியா?

(2) ஐம்புலன்கள் ஆக ஐவரும் ஆனால் ஆறுவது புலன் ஆன உள்ளம் (அல்லது அறிவு) ஆகும் ஆள் யார்?

(3) ஐம்புலனும் உள்ளம் இருந்தாலன்றி இயங்கா. அது போல் ஆறுவது புருஷன் இன்றி எங்ஙனம் பாஞ்சாலியின் ஐந்தான போகம் சிறக்கும்?

(4) பதி என்ற சொல்லைவிடக் கொழுநன் என்ற சொல்லே கணவன் என்ற பொருளை நேரிய முறையில் இரு வழக்கிலும் உணர்த்துகின்றது. மற்றும், சிறந்த ஆறுவது ஆட்வனை, "பெருங் கொழுநன்" என்று அடை கொடுத்துச் சிறப்பித்து நேறிய முறையிலும், அத்துணைச் சிறப்பிலா ஐவரையும் "பதிகள்" என வறிதே சாதாரண முறையிலும் கூறியதும் உணர்ந்து நோக்கினால், பாஞ்சாலி அறிவுப் புலனுக்க் கன்னனை மதித்தாள் என்பது தோன்றுகின்றதன்றோ?

(5) "உருகும்" என்பது உடன்பாட்டு வினையேயன்றி வினாவாகக்கொள்ள இட முண்டோ? "உளதோ?" என்று வினாவை வெளிப்படுத்திக் கூறியவர் "உருகும்?" என்று கூறி யிருப்பாரா?

நிற்க. தமிழ்ப்புலவர் கூறிய உரைமேல் எழும் வினாக்கள்:—

(1) "பெண்கள் எவரையும் திருப்தி செய்யக்கூடிய ஆட்வர் இவ்வுலகில் இல்லை!" என்பது உண்மையா? ஆயின், பெண்கள் யாவரும் இதுவரை ஆதி தொட்டுத் திருப்தி (அமைதி) இன்றியா வாழ்கின்றனர்?

(2) பெண்களா, ஆண்களா சபல சித்த முடையவர்கள்? ஆணல்லவோ, பெண்ணின்பச் சபலத்தால் விபசாரம் வெளிப் படையாய்ச் செய்வதும், 60 வயதுக்கு மேலும், புதிய 3, 4-வது தாரம் தேடுவதும் ஓரின்பம் ஆக்கக் கருதுகிறான்?

(3) ஆண்கள் பெண்ணை ஏய்க்கும்போது, பெண்கள் ஆணை ஏய்த்தால் குற்றம் என்ன? பெண்ணைவிட் ஆண் சிறந்தவனு? எப்படி?

இக் கேள்விக்கட்கு இவர் தம் பொருட்கோள் இடந் தருகின்றமையின் இவை நேரிய பொருளாகா. இனி இதற்குப் பொருள் தான் என்ன? எனின் கூறுவோம்.

பாஞ்சாலி, சுயம் வரத்தில், எல்லா மன்னரும் வில் வளைக்க முடியாமல் தோற்றுப் போகின்றது கண்டு, தனக்கு ஒரு வழி கிடைக்காதோ? என்று ஏங்கியும், அருச்சுனனுதியரும் இறந்து போய்விட்டனர் என்பது கேட்டிருந்ததால், இனித் தன்னை மணக்கத்தகுந்தவர் விஜயனுக்கு ஈடான வில் திறமையும், அவனினும் மிகுந்த கொடைத்திறம், புகழ், அறிவு, ஒழுக்கமும், ஆட்சியும் உடைய கன்னனே என நினைத்து அவனை நினைத்திருக்கலாம். அதற் கேற்றாற்போல், கருணன் வில் வளைத்து நாணேற்றி எய்து விடுகிறுன். அப்போது அவள் நினைவு முற்றுகிறது. ஆனால், நிகழ்ந்தது வேருகி விட்டதால், அவன்மேல் அன்று கொண்ட காதல்-ஒருதலைக்காமம்—(கர்ணனும் குந்தியின் மகனுதலின், பாண்டவர் தம் சாயையும் அவளுக்கு ஆறுதல் அளித்திருக்கலாம்). கடைசி வரை அவள் நெஞ்சில் தங்கியது. மற்றும், "கச்சுக் கடங்கா முலையள்.........கொடுங்காம நோய்கொண்டு இச்சித்த 'சிற்றின்பம் நுகராமல் வாழ்ந்த நாளாயனியே பாஞ்சாலி எனப் படுவதால், பாஞ்சாலியும் கொடுங்காம நோய்க்கு 'விட்ட குறை தொட்டதால்" ஆளாயினவளாய் இருக்கவேண்டும். தருமன் அடிமையான பின்பு, தன்னைச் சூதாடி இழந்தகாலை அதற்கு அவள் ஒருப்படாததும் தன் சுதந்திரத்தில் அவள் கொண்டிருந்த பற்றைக் குறிக்கும். எனவே, அப்பாவின் பொருளாவது:—

"இறைவ, ஐம்புலன்போல் ஐவரும் பதிகள் (தலைவர்) ஆகவும், இன்னம் எனது பேர் இதயம் வேறு ஒருவன் (கன்னன்) என் பெரும் கொழுநன் (கணவன்) ஆவதற்கு உருகுகிறது. ஆனால், புவியில் (என்போல்) அம் பெண்(ணுகப்) [பெருங் கொடுங்காம நோயினுல் வாடும் என் போன்று] பிறந்தவர் எவரையும் திருப்தி செய்யக்கூடியவர் யார்? [ஐம்புல ஐவரன்று. மற்று ஆறும்புல அருக்கன் மகனே] ஆதலால், (ஐவரில்) ஒருவரேனும் என்னைத் திருப்திச் செய்யக்கூடும் என்று நம்ப முடியவில்லை" என்றனள், உள்ளதை உள்ளவாறு உரைக்கும் வசிட்டனின் இல்லற மனைவி அருந்ததியைப் போன்ற பாஞ்சாலி.

இறுதியாக ஒன்று. "அம்புவிதனிற்...............உளதோ?" என்ற அடியில்-சொல்-பொருள் அமைப்பில்லை. வில்லி அதனை, மயங்க வைத்தல் என்ற குற்றத்தில் பாடி யுள்ளார்.

நிற்க, இதுவரை கூறியவற்றால், பாண்டவர் மனைவி பாஞ்சாலி போன்ற மாய மகளிரைப் பழிப்பதில் குற்றம் இல்லை என்பதும் பத்தினிகளாகிய தூய மகளிரைப் பழிப்பதே தகுதி யன்று என்பதும் பெறப்பட்டன.

# அமைதியும் - புயலும்

"சாயிதாசன்"

எல்லாரது வாழ்க்கையிலும் நடக்கக்கூடிய சம்பவந்தான் என் வாழ்க்கையிலும் நடந்தது. மிகவும் சர்வ சாதாரண மானதுதான். புதியதாக ஒன்று நடக்கவில்லை. ஆனால் அதன் பயன்-வேகம்-என் வாழ்க்கையையே மாற்றிவிடும் என்று நினைக்கவில்லை. அமைதி குடி கொண்டிருந்த மனதில் புயலைக் கிளப்பி விட்டது. புயல் ஓயவே இல்லை.

வாழ்க்கைப் புயலில் அகப்பட்டுத் தத்தளித்து பின்பு எதிர்த்து அமைதியை உண்டாக்கியிருக்கிறேன். ஒரு தட்வை இரண்டு தடவையல்ல. அனேகம் தடவைகள். ஆனால் என் மனதில் புயலைக் கிளப்பிவிட்ட சம்பவம் ஒரு சிறு தென்றல்தான். அதில் அகப்பட்ட நான் அதை எதிர்க்க முடியவில்லை.

என் மனதில் இருந்த சந்தோஷம் அடியோடு போய்விட்டது. ஒருவருடனும் பேச விரும்பவில்லை என் மனம். ஏகாந்தத்தை நாடிற்று மனம். மனதில் ஏகாந்தம் தான் குடி கொண்டிருந்தது. காரணம்?......ஒன்றிலுமே செல்லவில்லை மனம்...சுருங்கச் சொன்னால் ஒன்றுமே செய்ய முடியாமல் ஆக்கிவிட்டது என்னை.

மேற்படி சம்பவம் நடந்து சரியாக வருஷம் மூன்று கூட பூர்த்தி யாகவில்லை. அதற்குள் என் வாழ்க்கைப்படகு பல பாறைகளில் பலமாக மோதுண்டது. ஆனால் என் நல்ல காலம் உடையவில்லை. தத்தளிப்பிலேயே இருந்தது. மிகுந்த அச்சத்தையும் கொடுத்தது. என் மனதில் இருந்த வருத்தம் எனக்கு மிகப் பாரமாகத் தோன்றிற்று. அதை யாரிடமாவது சொன்னால் கொஞ்சம் பாரம் குறையும் என்று நினைத்தேன். ஆனால் யாரிடம் சொல்லி அழுவது? என் அறையில் உள்ள நான்கு சுவர்களிடம் தான் முறை யிட்டேன். புலம்பி, புலம்பி அழுதேன், உயிரற்ற சுவர்கள் என்ன சமாதானத்தைச் சொல்லப்போகின்றன?

இடையில் ஒன்று சொல்ல மறந்து விட்டேனே. என் வாழ்க்கைப் படகுக்கு நான் ஒருவனே தான் பட கோட்டியாய் இருந்தேன். ஆனால் கழிந்த மூன்று மாத காலமாக, எனக்கு உதவி செய்ய—படகு பாறையில் மோதாமல் பார்த்துக்கொள்ள வந்து சேர்ந்தாள், ராமு-மனைவி என்ற பட்டத்தை தாங்கிக்கொண்டு. பாவம்! அவளும் பெண் ஜன்மந்தானே. படகை சரியாக செலுத்திக்கொண்டுபோகத் தெரியவில்லை. வேண்டுமானால் அவளையே கேளுங்கள், சொல்லுவாள். நான் கலியாணத்தின்போது ஒரு பொம்மைமாதிரி நடந்து கொண்டேன். கலியாணம் என்ற சிறு சந்தோஷ உணர்ச்சியாவது கலியாணத்தின்போது எனக்கு இருந்ததா என்று ஆனால் அவளுக்கும், நாகப்பூரிலிருக்கும் தனது அக்கா வரவில்லையே கலியாணத்திற்கு என்ற வருத்தத்தில்

இருந்தாள். என் மனதில் உள்ள வருத்தத்தின் காரணத்தை அவள் அறிந்தால் ஒரு வேளைக்குக் கலியாணத்திற்கு அவள் இசைந்திருப்பாளா?.........

எங்கள் வீட்டில் மொட்டைமாடி ஒன்று உண்டு. தினம் சாயங் திரம் அந்த மொட்டை மாடியில் ஈஸிச்சேரில் சாய்ந்த வண்ணம் இருப்பேன். வெளியில் போகமாட்டேன். வழக்கம்போல் ஈஸிச் சேரில் சாய்ந்து கொண்டேன். அன்று சாயந்திரமும் படிப்பதற் காக "டிக்கன்ஸ்" நாவல் ஒன்றும் கொண்டும் போயிருந்தேன். படிக்க ஆரம்பித்தேன். மனம் செல்லவில்லை. நாவலைப் பிரித்த படியே மார்புமேல் சாத்திக்கொண்டேன். எவ்வளவு நாழி அப் படி இருந்தேனோ தெரியாது............மனதில் ஏற்பட்ட பாரம் குறைவதுபோல் தோன்றிற்று,......"மணி எட்டடிக்க போகிறதே; சாப்பிட வரேளா" என்று ராமுவின் குரலைக் கேட்டவுடன், கண் விழித்தேன். கால்கூட அலம்பவில்லை. சாப்பிடப் போனேன். பேருக்கு துளி சாப்பிட்டுவிட்டு எழுந்திருந்து போய்விட்டேன் பழையபடி மொட்டை மாடிக்கு.

சிறிது நேரம்கூட ஆகவில்லை. பக்கத்தில் ராமு வந்து நின் ருள். நான் அவளைக் கவனித்தும் கவனியாததுபோல் இருந் தேன். "நீங்கள் ஏன் இப்படி ஒருமாதிரியாய் இருக்கிறீர்கள்? சதா சர்வதா. கலியாணத்தின்போதுகூட சந்தோஷத்தைக் காணுமே! என்னிடம் சொல்லாமல் வேறு யாரிடம் சொல்லப்போகிறீர்கள்? உங்கள் வருத்தத்தின் காரணத்தை."

நான் பதிலே பேசவில்லை.

"உங்களை நான் ரொம்ப வற்புறுத்தவில்லை. இஷ்டமிருந்தால் சொல்லுங்கள் இல்லாவிடில்........."

"ராமு! ராமு! அவசரப்படாதே! சொல்லிவிடுகிறேன். உன் னைத் தவிர யார் அதைச் செவி கொடுத்து கேட்கப்போகிருர்கள்? உன்னிடம் சொன்னுல்தான் எனக்கும் மனதில் உள்ள பாரம் குறைந்ததுபோலிருக்கும். சரி! ஆனுல் நீ அதைக் கேட்டு வருத் தப்படக்கூடாது. சொல்லுகிறேன் கேள்.

"ராபர்ட் கிளப்பில்" நான் ஒரு மெம்பர். நான் அதில் மெம்ப ராய் சேர்ந்த காரணம் அதில் உள்ள, பலவகையான விளையாட்டு கள்தான் காரணம். தினம் விளையாடிவிட்டு மாலை, ஆறுமணிக்கு வீடு திரும்புவேன். என் வீட்டிற்கு வரவேண்டுமானுல் மேலத் தெருவை கடந்துதான் வரவேண்டும்.

உன்னை கலியாணம் பண்ணிக் கொள்வதற்கு முன்பு நான் ஒருத்தியைக் காதலித்தேன். அவள் மேலத் தெருவில்தான் இருந்தாள். மூன்று அல்லது நான்கு வருடங்களுக்கு முன்பு. தினம் விளையாடி விட்டு வீடு திரும்பும் போது, அவள் வீட்டி லேயே அவளை அனேகந் தடவை சந்தித் திருக்கிறேன். அப் பொழுதெல்லாம், அவளைப் பார்த்தாலும் சாதாரணமாகப் போய் விடுவேன்.

ஆனால் அன்று ஒரு நாள் அவள் பூ வாங்கிக் கொண் டிருந்தாள் ஒரு கிழவியிடம். அப்பொழுது நான் வீடு திரும்பும் சமயம். ஒரு நாளும் இல்லாதபடி அன்று தனி அழகுடன் விளங்கினாள். நான் அவளைப் பார்த்துக் கொண் டிருந்தேன். சிறிது நாழி அப்படியே நின்று கொண் டிருந்தேன். அதை அவளும் கவனித்து விட்டாள். அவளும் என்னை உற்றுப் பார்த்தாள். அவள் கண்களில் தான் என்ன கவர்ச்சி ......?

பின்பு எங்களுக்கு இது வழக்கமாய் விட்டது. நான் விளையாடி விட்டு வீடு வரும்போது அவள் வாசலில் நிற்பதும், நான் வீட்டருகில் சென்றதும் அவள் கண்கள் என்னை வர வேற்பதுமாய் விட்டது. நான் அவளை முழு மனதுடன் காதலிக்கிறேன் என்று நன்றாய் தெரிந்து கொண்டாள். ஆனால் எனக்குத் தான் தெரியவில்லை. அவள் எண்ணத்தைப்பற்றி...........

அவளிடமே அதைக் கேட்டு விடுவது என்று நினைத்தேன். அதற்கு தைரியம் வரவில்லை. ஆனால் நடுவில் நாங்கள் சந்திப்பது மட்டும் நிற்கவில்லை. "இன்று எப்படியாவது கேட்டுவிடுவது அவளது எண்ணத்தைப்பற்றி" என்று மனதை தைரியப் படுத்திக் கொண்டு வீட்டருகில் சென்றால், தைரியம் எங்கேயோ ஓடி விடுகிறது. இந்த மாதிரி அனேக தட்வைகள் முயற்சி செய்தேன். ஆனால் எல்லாம் வீண்.

கடைசியில் மனதில் இருந்த ஆத்திரம், எப்படியாவது கேட்டு விடுவது என்ற எண்ணத்துடன் ஒரு நாள் போனேன். வாசலில் கட்டிலில் உட்கார்ந்திருந்தாள் அவள். நான் உள்ளே நுழைந்ததும் அவள் கண்கள் என்னை வரவேற்றன. அவைகளின் வசீகரத்தில் மூழ்கிய நான் அவளுடன் பேச ஆரம்பித்தேன் முதலில். அவள் கேட்டுக் கொண்டே வந்தாள்.

"நீங்கள் என்னை விரும்பும் போது, நான் உங்களை ஏமாற்ற விரும்ப வில்லை. நான் உங்களையே மணம் புரிந்து கொள்ளுகிறேன். ஆனால் நீங்கள் இன்னும் என்னைப் பற்றி தெரிந்து கொள்ள வில்லையே," என்றாள். நான் பேசி முடிந்ததும், நான் பதில் சொல்லுமுன் அவளே சொல்ல ஆரமபித்தாள். "இன்று காலைதான் என் தகப்பனாரும் தாயாரும் ஒரு விசேஷத்தை முன்னிட்டு திண்டுக்கல் போயிருக்கிறார்கள். சாயந்திரம் அவர்கள் வந்து விடுவார்கள்.

"குட்டி—குட்டி" என்று உள்ளிருந்து யாரோ கூப்பிடவே, "பாட்டி கூப்பிடுகிறாள்—வருகிறேன். பின்பு பேசிக் கொள்ளுவோம்;" என்று போய் விட்டாள்.

படியை விட்டு இறங்கி வரும் போதே, மனதில் ஒரு ஏக்கம், ஏமாற்றம் குடி கொண்டது.

பின்பு இரண்டு நாள் அவள் வீட்டுப் பக்கம் போனேன். அவள் தென்பட வில்லை. அவள் பெயர் கூடத் தெரியாது. ஆனால்

ஒன்று மட்டும் நிச்சயம். என்னை அவள் வெறுக்க வில்லை-விரும்புகிறாள்.—அந்த மட்டிலும் மனதில் சிறு சந்தோஷம் உண்டாயிற்று.

மூன்றாவது நாளும் அவள் வீட்டிற்குப் போனேன். வீடு பூட்டியிருந்தது. பக்கத்தில் விசாரித்ததில் அன்று காலையில் தான் அவர்கள் வேறு ஊருக்கு மாற்றிப் போய் விட்டார்கள். எந்த ஊருக்குப் போனார்கள் என்று தெரியாது என அறிந்தேன்.

அவர்கள் போன ஊரை தெரிந்து கொள்ள என்னாலான மட்டும் முயற்சி செய்தேன். வீணாயின. மனதில் அன்று ஏற்பட்ட ஏக்கமும் ஏமாற்றமுந்தான் என்னை விட்டு இன்றும் பிரியமாட்டேன் என்கின்றன. இந்த ஜன்மத்தில், நாங்கள் ஒருவரை ஒருவர் காதலித்த காதல் கைகூடாமல் போனாலும் ஒருதரமாவது அவளைப் பார்த்தால்தான் மனம் சாந்தி அடையும் போலிருக்கிறது.

ராமு! இதைக் கேட்டு நீ வருத்த மடையாதே. அவள் மேல் வைத்த அன்பு முழுவதும் இப்போது உன் மேல்தான் வைத்திருக்கிறேன்."

நான் இதைச் சொல்லி முடித்ததும் ராமு ஒரு பெருமூச்செறிந்தாள்.

பின்பு, "சரி! நீங்கள் சொன்னதைப் பற்றி எனக்கு துளிகூட வருத்தம் கிடையாது. நான் ஒன்று சொல்ல மறந்து விட்டேன் உங்களிடம். இன்று சாயந்திரம், என் அக்கா வரப்போவதாக ஒரு கார்டு வந்தது. நாளைக் காலை ரயிலில் வரப்போகிறாளாம். ஸ்டேஷனுக்கு நம்ம இரண்டு பேரையும் வரச்சொல்லி யிருக்கிறாள். நம் கலியாணத்தின் போதே அக்காவுக்கு உடம்பு சரியில்லை. அதனாலேதான் விசேஷத்திற்குக் கூட வரவில்லை. அதனால் இப்போது இங்கே வந்து தங்கிவிட்டு நம்ம இரண்டு பேரையும் பார்த்துவிட்டுப் போகப் போகிறாளாம். நாளைக்கு முடிந்தால் வாருங்கள் ஸ்டேஷனுக்குப் போவோம்."

மறுநாள் நான் ஸ்டேஷனுக்குப் போகவில்லை. அவள்—ராமு தான் போனாள். நான் வாசலில் ஈஸிச்சேரில் சாய்ந்து கொண்டிருந்தேன். சிறிது நேரத்தில் வாசலில், ஒரு வண்டி வந்து நின்றது. ராமு இறங்கினாள் முதலில். "என் அக்காவும், அத்திம்பேரும் வந்து விட்டார்கள்" என்று கூறிக்கொண்டே உள்ளே வந்தாள். வண்டியிலிருந்து ராமுவின் அக்காவும் அவள் கணவரும் இறங்கினார்கள்.

அவள்—ராமுவின் அக்காவைப் பார்த்ததும் எனக்கு தலை சுழன்றது. மனதில் இருந்த பாரம் அடியோடு அமுங்கி விட்டது. அவள் வேறு யாரும் இல்லை.—நான் காதலித்த அவள்தான். என் கண்ணிலிருந்து விழுந்த ஒரு சொட்டுக் கண்ணீரின் காரணம் ராமுவுக்குத் தெரியும். அவள் அக்காவுக்குத் தெரியும்.—ஆனால் அவள் கணவருக்கு................இனி மேல் என் மனதில் வருத்தம் இருக்கக் காரணமே இல்லை. மனதில் ஏற்பட்ட புயல்தான் ஓய்ந்து விட்டதே!

# ஓர் அற்புத சிருஷ்டி

(ர. ப. மு. கனி)

அழகிற் சிறந்த ஆரணங்குகளை ஆக்கி இருக்கிறான். கற்பிற் சிறந்த காரிகைகளுக்கு உருக்கொடுத் திருக்கிறான். தம் அன்பர்களுக்காக நீரிலும் நெருப்பிலும் புகுந்து தியாகஞ் செய்யக் கூடிய நாரீமணிகளை சிருஷ்டித் திருக்கிறான். காதலில் கட்டுண்ட இளங்காளைகள், போர்முகத்தில் எவர் வரினும் புறங்கொடா வீரர்கள், செய்ந்நன்றி கொல்லா மேலோர், காட்டையும் நண்பர்களையுங் காட்டிக் கொடுக்கும் துரோகிகள், பேர்பெற்ற—நாம் கனவிலுங் கருதக்கூடாத—தீயோர்கள், வயிறு குலுங்க நம்மை நகைக்க வைக்கும் கோமாளிகள், விதூஷகர்கள் இன்னோரன்ன பற்பல விதமான மனிதர்களையும் அவன் படைத்திருக்கிறான். அவன் பிரம்மாவா? இல்லை. ஒரு சாதாரண மனிதன். ஒரு ஏழை நாடகாசிரியன். ஆனால் இன்று உலகம் அவனைப் புகழ்கிறது. அவனுடைய சிருஷ்டிகள் பலப்பல விதமாகப் புகழப் படுகின்றன. அவற்றைப் பற்றிய நூல்களே கணக்கற்றன. அவனுடைய நாடகங்களிலே ஒவ்வொன்றிலும் வெவ்வேறு விதமான பாத்திரங்களை, நவ நவமான காட்சிகளை, ஒன்றைப் போல் ஒன்றில்லாத நிகழ்ச்சிகளை, கற்க்க் கற்க்க் களிபேருவகை யூட்டும் பொருள்களை நாம் காண்கிறோம். அவன் தான் **ஷேக்ஸ்பியர்.** அவனுடைய ஒரே ஒரு அற்புத சிருஷ்டியை மட்டும் பார்ப்போம்.

வழுக்கைத்தலை, நரைத்த தாடி மீசை, மகோதரம் போன்று பெருத்த வயிறு, இடுப்பில் 'ஸர்' பட்டத்தைக் காட்டும் வாள் இவற்றுடன் கூடியவன் நாம் பேசப்போகிற சிருஷ்டி. அவனுக்கு ஐம்பது வயதிருக்கும். வீரன் போல் கம்பீரமாகப் பார்ப்பான். ஆனால் அவனுடைய பார்வையில் அசடு வழியும். மிகுந்த தைரியமுள்ளவன் போல் பேசுவான்; ஆனால் தொடை நடுங்கி. மற்றவர்களைக் கோழைகள் என்பான்; ஆனால் அவன் மனதில் இருப்பதெல்லாம் கோழைத்தனம். பேசுவதெல்லாம் உண்மை என்று சத்தியங்கூடச் செய்வான்; ஆனால் முழுதும் கலப்பற்ற பொய்யாய் இருக்கும். பொய் சொல்வதற்குக் கூசவே மாட்டான். உலகைச் சுருட்டிக் கடலுள் எறிந்து விடுவதுபோல் பேசுவான். அவனுடைய உயிர் நிலை சேக் (sack) என்னும் மதுவில் தான். அவனுடைய உணவு ஜாபிதாவை இதோ சமர்ப்பிக்கிறேன், பார்த்துக் கொள்ளுங்கள். ஒரு சேவல் 2 ஷில்லிங் 2 பென்ஸ், சூப்பு 4 பென்ஸ், **இரண்டு காலன் கள்ளு (sack) 5 ஷி. 8 பெ, இரவுச் சாப்பாட்டுக்குப் பின் கள்ளு 2 ஷி. 6 பெ, ரொட்டி ½ பென்ஸ்.** ஆனால் அவன் தோன்றும்போதெல்லாம் அவனை நேருக்கு நேர் சந்திப்பதுபோல் தோன்றும். நம் உள்ளம் பொங்கும். நம்மைச் சிரிக்க வைக்க அவன் என்னதான் பேசுகிறான் என்று சொல்ல முடியாது. அவன் பெயர்தான் ஸர் ஜான் ஃபால்ஸ்டாஃப் (Sir John Falstaff).

ஸர் ஜான் என்று தான் அவனை அவன் நண்பர்கள் அழைப்பது. அவன் ஒரு இடத்தில் சொல்கிறான், 'பழகியவர்களுக்கு நான் ஜேக் ஃபால்ஸ்டாஃப், அண்ணன் தம்பிகளுக்கு ஜான், ஐரோப்பா முழுவதற்கும் ஸர் ஜான்' என்று. ஸர் ஜான், விண்ட்ஸர் பிரபுக்களின் உல்லாச மனைவியர் (Merry Wives of Windsor) என்ற நாடகத்திலும், நான்காம் ஹென்றி மன்னன் முதல் இரண்டாம் பாகங்களிலும் தோன்றுகிறான். முதல் நாடகத்தில் அவன் தான் பிரதம பாத்திரம். அவனுக்கு சுய அறிவு மிக்க குறைவு என்பதை அது காட்டுகிறது. விண்ட்ஸர் பிரபுக்கள் இருவரின் மனைவியர்க்கு அவன் ஒரே விதமான காதல் கடிதங்கள் எழுதுகிறான். அவர்கள் இருவருஞ் சேர்ந்து அவனுக்குப் புத்தி கற்பிக்கின்றனர். மூன்று முறை அவமான மடைகிறான். கடைசியில் பிரபுக்களுடனும் அவர்களுடைய இரு மனைவியருடனும் சமாதானமாகப் போய் விடுகிறான். இதில் ஒரு விசேஷ மென்ன வென்றால் ஃபால்ஸ்டாஃபுக்கு அந்தச் சீமாட்டிகளில் ஒருத்தியின் கணவனைத் தெரியாது. அவள் வீட்டுக்குப் போய்வந்ததைப் பற்றி அவளுடைய கணவனிடமே கயிறு திரிக்கிறான்.

நான்காம் ஹென்றி மன்னன் என்ற நாடகத்தில் ஃபால்ஸ்டாஃபின் பாகம் மிக மிக சுவாரஸ்யமானது. அவன் வேல்ஸ் இளவரசனுடைய சகா. அவன் கோஷ்டியில் இன்னும் நால்வர் உண்டு. ஈஸ்டு சீப் என்னு மிடத்தில் பன்றித்தலை மதுக்கடை (Boar's Head Tavern) தான் அவர்கள் கூடுமிடம். அக்கடையின் சொந்தக்காரி ஸ்ரீமதி குவிக்கிலி அம்மாள். அவள், பாவம், ஒன்றுமறியாப் பேதை. அவள் தலையில் கையை வைக்கிறான் ஃபால்ஸ்டாஃப். அவளிடம் மயக்கு வார்த்தைகளைச் சொல்லிக் காலங் கழிக்கிறான். அவன் வரும் ஒரு சில கட்டங்களை மட்டும் பார்ப்போம்.

ஒரு தட்வை கேண்டர்பரிக்குப் பண முடிப்புகளுடன் போகும் பக்த கோடிகளை வழிப்பறி செய்யத் திட்டம் போடுகின்றனர் ஃபால்ஸ்டாஃப் கோஷ்டியார். காலையில் நாலு மணிக்கு ஒரு ஏகாந்தமான பாதையில் பக்தகோடிகளைக் கொள்ளை யடிக்க வேண்டுமென்பது அவர்கள் ஏற்பாடு. அதன்படி புறப்பட்டும் விடுகின்றனர். ஆனால் வேல்ஸ் இளவரசனும் பாயின்ஸ் என்ற அவன் கூட்டாளியும் ஃபால்ஸ்டாஃபைக் கேலி செய்யத் தீர்மானிக்கின்றனர். அவர்கள் இருவரும் மாறுவேஷத்தில் குறிப்பிட்ட இடஞ் சென்று அங்கே கட்டி இருந்த ஸர் ஜானின் குதிரையை அவிழ்த்து விரட்டி விட்டுப் பக்கத்தில் ஓரிடத்தில் ஒளிந்துகொள்கின்றனர். ஃபால்ஸ்டாஃப் குதிரையைத் தேடிக்கொண் டிருக்கும்போது சிலர் பணங் கொண்டு செல்வது தெரிகிறது. அவர்களை ஃபால்ஸ்டாஃப் உள்ளிட்ட நால்வர் கொள்ளை யடித்து, அதை ஓரிடத்தில் இருந்து கொண்டு பங்கு போடுகின்றனர். அப்போது இளவரசன் தன் கூட்டாளியோடு வெளிப்பட்டுப் பயமுறுத்துகிறான். யாவரும் பணத்தைப் போட்டு விட்டு ஓடி விடு

கின்றனர். ஸர் ஜான் ஓர் உதையோடு தன் வயிற்றைத் தூக்கிக் கொண்டு ஓட முடியாமல் ஓடுகிறான். மறுநாள் காலை பழைய மதுக்கடையில் இளவரசனும் பாயின்ஸும் இருக்கின்றனர்.

அங்கே ஃபால்ஸ்டாஃப் அவன் கோஷ்டியாரோடு வருகிறான். அவர்களுடைய மூக்கெல்லாம் காயம்; உடைகளெல்லாம் இரத்தம். ஸர் ஜானின் வாள் நெளிந்துபோய் இருக்கிறது. அவன் முகத்தில் கோபம் கொழுந்துவிட்டெரிகிறது. இளவரசனையும் பாயின்ஸையும் கோழைகள், கோழைகள் என்று திரும்பத் திரும்பத் திட்டுகிறான். மது வருகிறது. அதைக் குடிக்கிறான். அதில் சுண்ணாம்பு கலந்திருக்கிறது. அவன் கோபம் அதிகரிக்கிறது. (நம் சௌகரியத்திற்காக ஸர் ஜான்—ஸ. ஜா—என்றே அவனை அழைப்போம்).

ஸ. ஜா:—எல்லாவற்றிலும் போக்கிரித் தனந்தானா? இந்த மாதிரி துஷ்டர்களிடத்திலே போக்கிரித்தனம் தவிர வேறென்ன இருக்க முடியும். இருந்தாலும் கோழைத்தனம் சுண்ணாம்பு சேர்ந்த கள்ளைவிட மோசந்தான்......

இளவரசன்:—என்னடா குடிகாரா? என்ன உளறுகிறாய்?

ஸ. ஜா:—அட ராஜா மகனே! உன்னையும் உன் குடிகளையும் நான் ஒரு தடிக்கம்பாலே, காட்டு வாத்துகளை விரட்டுவதுபோல, இந்த ராஜ்யத்தை விட்டுத் துரத்தாவிடில் இனி மீசை தாடி வைக்கிறதில்லை. (ஏளனமாக) அட என் வேல்ஸ் இளவரசனே!

பிறகு சிறிது சாந்தமடைகிறான். இளவரசன், விஷயத்தைச் சொல்லும்படி கேட்கிறான்.

ஸ. ஜா:—ரெண்டு மணி நேரம் பனிரெண்டு பேரோடே வாள் சண்டை போட்டிருக்காவிடில், நான் ஒரு துஷ்டண்டா! நான் தப்பித்ததே அற்புதந்தான். இதுவரை இந்தமாதிரி நான் சண்டை போட்டதே இல்லை.

அவன் நண்பர்களில் ஒருவன்:—நாங்கள் நாலு பேர், சுமார் ஒரு டஜன் ஆசாமிகள் மேலே பாய்ந்தோம்.

ஸ. ஜா:—சுமார் பதினாறு பேராவது இருக்கும்.

ஒருவன்:—அவர்களைக் கட்டினோம்.

இன்னொருவன்:—இல்லெ, இல்லெ; அவர்களைக் கட்டவில்லை.

ஸ. ஜா:—அட போடா முட்டாள்! அவர்கள் எல்லாரையுமே கட்டிப் போட்டோம்.

முதலாமவன்:—நாங்கள் பங்கு போட்டுக்கொண்டு இருக்கையில் ஏழெட்டு ஆசாமிகள் எங்க மேலே பாய்ந்தார்கள்.

ஸ. ஜா:—அவர்கள் நாங்கள் கட்டிப் போட்டிருந்தவர்களையும் அவிழ்த்து விட்டுவிட்டு வந்தார்கள்.

இளவரசன்:—நீங்கள் எல்லோரும் அவர்கள் கூடச் சண்டை போட்டீர்கள், இல்லையா?

ஸ. ஜா:—எல்லாருமா? எல்லாருமின்னு யாரு? நான் மாத்திரம் தனியா ஒரு ஐம்பது பேரோடெ சண்டை போட்டிருக்காவிடில் நான் மனுஷனே இல்லே.

இள:—நீங்கள் சிலரையாவது கொல்லவில்லை?

ஸ. ஜா:—ஆமாம். இரண்டு பேரை நான் சட்ணி ஆக்கிப் போட்டேன். இரண்டு தடியன்களை, பருக்கன் துணி சூட்லே வந்த ரெண்டு தடியன்களை நான் நொறுக்கி விட்டேன். ஹால்! (இப்படித்தான் அவன் இளவரசனை அழைப்பான்) ஹால்! நான் பொய் சொன்னால் என் முகத்தில் காரித் துப்பு. என்னைக் குதிரை என்று கூப்பிடு. நான் இப்படி உட்கார்ந்திருந்தேன். நாலு தடியர்கள் பருக்கன் துணி சூட்லே வந்து என்னைத் துரத்த ஆரம்பித்தார்கள்.

இள:—என்ன, நாலா? நீ இரண்டு தானே சொன்னாய்!

ஸ. ஜா:—நாலு, ஹால், நாலு நாலு தான் சொன்னேன்.

பாயின்ஸ்:—ஆமா, ஆமா, அவரு நாலுதான் சொன்னாரு.

ஸ. ஜா:—அந்த நாலுபேரும் திடீரென் வந்து என்னைத்தாக்கினார்கள். நான் அந்த ஏழு பேரையும் என் வாள் முனையாலே இப்படித் தடுத்தேன்......

இள:—ஏழா? ஏன், பருக்கன் துணி சூட்லே இப்போது கூட நாலு பேர்தானே நின்றார்கள்.

பாயின்ஸ்:—ஆமா, நாலுதான் பருக்கன் சூட்லே......

ஸ. ஜா:—உண்மையாகவே ஏழு. இல்லே என்றால் நான் ஒரு துஷ்டன்.

இள:—உன் இஷ்டப்படியே இருக்கட்டும். மேலே சொல்லு.

ஸ. ஜா:—ஹால்! நான் சொல்கிறதைக் கேட்கிறாயா?

இள:—ஆமப்பா. உன்னையும் கவனித்துக் கொண்டுதான் வருகிறேன்!

ஸ. ஜா:—நன்றாய்க் கவனி. கவனிக்க வேண்டிய விஷயமாக்கும். பருக்கன் சூட்லே ஒன்பது பேர் நின்றதைச் சொன்னேன் பாரு.

இள:—அட கூட இரண்டா!

ஸ. ஜா:—அவர்களால் என் எதிரில் நிற்க முடியவில்லே.

பாயின்ஸ்:—அவர்கள் சூட் கழன்று விட்டதோ?

ஸ. ஜா:—எனக்கு இடங் கொடுத்து விட்டார்கள். ஆனால் நான் ரொம்ப ஜாக்ரதையாக என்னைப் பாதுகாத்துக்கொண்டு, மெதுவாக் அந்தப் பதினொன்னில் ஏழு பேரைத் தீட்டி விட்டேன்.

இள:—அட் பாவி! இரண்டு பருக்கன் துணி சூட் போட்டவர்களிலிருந்து பதினொருபேர் கிளம்பி விட்டார்களே!

ஸ. ஜா:—இந்தச் சமயத்திலே என்[illegible] காலம் பாரு, மூணுபச்சை உடுப்பு அணிந்தவா[illegible] னால் வந்து என்னை விரட்ட ஆரம்பித்து விட்டார்கள். ஹால்! இருட்டு எப்படி இருந்தது தெரியுமா? உன் உள்ளங்கை உனக்குத் தெரியாது!

இள:—இந்தப் பொய்களெல்லாம் அதைச் சொல்கிறவனைப் போலவேதான், பெரிய மலைபோல, முட்டாள்தனமானவையாக இருக்கின்றன. ஏனடா, களிமண் மூளை, கொழுத்த......

ஸ. ஜா:—உனக்கென்ன பயித்தியமா? இல்லை, உனக்கென்ன பயித்தியமா என்கிறேன். உண்மையை உண்மையில்லை என்கிறாயே?

இள:—வா இங்கே. உன் காரணத்தைச் சொல்லு. உன் உள்ளங்கையைப் பார்க்க முடியாத இருட்டிலே பச்சை யுடையில் வந்தவர்களை நீ எப்படிப் பார்த்தாய்? சொல்லு.

பாயின்ஸ்:—பிரகஸ்பதி, சொல்லு. காரணத்தைச் சொல்லு.

ஸ. ஜா:—கட்டாயத்தின் பேரிலேயே? கட்டாயப்படுத்தினால் நான் காரணஞ் சொல்ல முடியாது. காரணமென்ன நாவற்பழம் போல் பெருத்தா கிடக்கிறது? கட்டாயத்தின் பேரில் உலுப்ப.

இவ்விதமாக குழப்பி விடுகிறான் ஃபால்ஸ்டாஃப். அவன் வெளியே சென்ற பின் இளவரசன் அவன் கூட்டாளிகளிடம் அவர்கள் காயங்களுக்குக் காரணங் கேட்கிறான். அவர்களில் ஒருவன் சொல்கிறான்: "அவன் வாளை அவனேதான் வளைத்துக் கொண்டான், உங்களிடம் சண்டை போட்டதாகச் சொல்வதற்கு. எங்களையும் அப்படியே செய்யும்படி சொன்னான். முள்ளுப் புல்லு இருக்கிறதே! அதைக்கொண்டு எங்கள் மூக்குகளில் கீறிக் காயப்படுத்திக்கொள்ளச் சொன்னான். அதிலிருந்து வடிந்த இரத்தத்தை எங்கள் உடைகளில் தேய்த்துக் கொள்ளச் சொன்னான். நாங்கள் பெரிய சண்டை போட்டதாகக் காட்டவேண்டுமாம். எல்லோரும் அவன் சொன்னபடி செய்தோம்."

இவ்விதம் ஃபால்ஸ்டாஃப் எந்த இடத்திலும் பொய் பேசக் கூசுவதில்லை. பிறர் அதை நம்புகிறார்களா இல்லையா என்பதைப் பற்றியும் அவனுக்குக் கவலை இல்லை.

அவன் இளவரசனிடம் வருகிறான். "ஹால்! நாளை உன் அப்பாவிடம் போகும்போது அவர் உன்னைப் பேச மாட்டாரா? இப்பவே ஒரு பதில் தயார் செய்து கொண்டு விடு" என்கிறான். ஸர். ஜான் அரசனாகவும், இளவரசன் இளவரசனாகவும் நின்று கொள்கின்றனர்.

ஸர். ஜான்:—(இப்போது இளவரசனின் தந்தையாக நடிக்கிறான்) ஹேரி! (இவ்விதந்தான் அரசர் இளவரசனை அழைப்பார்) ஹேரி! நீ எப்படி உன் நேரத்தைப் போக்குகிறாய், யாருடன் போக்குகிறாய் என்பதே எனக்கு ஆச்சரியமாய் இருக்கிறது. சம்பந்திச்செடி மிதிபட மிதிபட அதிகமாக வளருமாம். ஆனால் இள

மையோ எவ்வளவு அதிகமாக வீணாக்கப்படுகிறதோ அவ்வளவு சீக்கிரமாக மறைந்து விடும். நீ என் மகன்தான் என்பது என் அபிப்பிராயம். உன் தாயும் அப்படித்தான் சொல்கிருள். உண்மையிலேயே நீ என் மகனுனல் இதைக் கேள்: இங்கிலாந்து அரசனின் மகனு திருட்னுக, பணப்பைகளேத் திருடுவான்? கேட்க வேண்டிய ஒரு கேள்விதானே. ஹேரி, நம்ம பாஷையிலே கீலெண்ணெய் என்று சொல்கிற ஒரு வஸ்து இருக்கிறது. அது கெட்ட நாற்ற மடிக்கும். அதுபோல்தான் இருக்கிறது உன்னுடைய சகவாசம். ஹேரி, நான் இப்போது குடிவெறியில் பேசவில்லை. கண்ணீருட்னுக்கும் பேசுகிறேன். இருந்தாலும் உன் சகாக்களில் ஒரே ஒரு நேர்மையான மனிதன் இருக்கிருன். அதை நான் கவனித்திருக்கிறேன். ஆனுல் அவன் பெயரை எனக்குத் தெரியாது.

இள:—அவன் எந்தமாதிரி மனிதன், அப்பா?

ஸ. ஜா:—அருமையான சாயலுள்ளவன். மிகப் பெருத்த சரீரி. குஷியான பார்வை, குளுமையான கண்கள், நிமிர்ந்த நன்னடை—இவை உள்ளவன். சுமார் ஐம்பது வயதிருக்கும் அவனுக்கு. இப்போது ஞாபகம் வருகிறது- அவன் பெயர். ஃபால்ஸ்டாஃப். அவன் சிற்றின்பப் பற்றற்றவனுகத்தான் இருக்க வேண்டும். ஏனென்ருல், ஹேரி, அவன் பார்வை சொல்கிறது அதை. உன்னேடு அவனே மட்டும் வைத்துக்கொண்டு, மற்றவர்களேப் பிரஷ்டம் செய்து விடு. அதெல்லாம் இருக்கட்டும். போக்கிரி, இந்த மாதம் முழுவதும் எங்கே போய் இருந்தாய்?

இள:—ராஜா மாதிரியே பேசுகிருயோ? நீ நானுக ஆய்விடு-நான் அரசராக நடிக்கிறேன்.

அப்படியே இளவரசன் அரசர்போல் பேசுகிருன். ஃபால்ஸ்டாஃப் இளவரசன்போல் பதில் சொல்கிருன்.

இள:—ஹேரி! எங்கே இருந்து வருகிருய்?

ஸ. ஜா:—என் அருமைத் தந்தாய்? ஈஸ்டுசீப்பிலிருந்து.

இள:—உன்னேப்பற்றி நான் கேட்கும் புகார்கள் மிகவும் மனதைப் புண்படுத்துவனவாக இருக்கின்றன.

ஸ. ஜா:—பூ, அப்பா, அவை யெல்லாம் பொய்-

இள:—கருணையற்ற பையா, சத்தியம் செய்வாயா நீ? இனி என் முகத்தில் விழிக்காதே. நேரான வழியினின்றும் விலகி விட்டாய். கொழுத்த மனித உருவில் ஒரு பிசாசு உன்னேத் தொடர்ந்திருக்கிறது. அந்த மாமிச பிண்டமா உன் தோழன்! ஏண்டா, அந்த மூளேயற்ற மிருகத்தனம் படைத்த தானியக் குதிரோடு, மகோதரனேடு, கள்ளுப்பானேயோடு, சாக்கடையோடு, துர்க்குண உருவோடு, நேர்மையற்றவனேடு, முரட்டு முட்டாளோடு, வயது

முதிர்ந்த கர்வம் பிடித்த கழுதையோடு பேச்சு வார்த்தை வைத்திருக்கிறாய்? அவன் கள்ளை ருசி பார்த்துக் குடிப்பதில் தவிர எதில் கெட்டிக்காரன்? சேவல் கறியை உண்பதில் தவிர எதில் ஒழுங்கானவன்? சூதில் தவிர எதில் அவன் தந்திரசாலி? போக்கிரித்தனத்தில் தவிர எதில் அவன் சூதுள்ளவன்? எல்லாவற்றிலும் இருப்பதைவிட எதில் அவன் அதிகப் போக்கிரி? ஒன்றுமில்லாததில் தவிர எதில் அவன் தகுதியானவன்?

ஸ. ஜா:—தாங்கள் யாரைக் குறிப்பிடுகிறீர்கள்?

இள:—அந்தக் கிழட்டு, வெள்ளைத்தாடிச் சாத்தான், அந்த வெறுக்கத்தக்க துன்மார்க்கன், இளைஞரைக் கெடுக்கும் ஃபால்ஸ்டாஃபைத்தான் சொல்கிறேன்.

ஸ. ஜா:—பிரபு, நான் அவனை அறிவேன்.

இள:—அவனை உனக்குத் தெரியும் என்பது எனக்கும் தெரியும்.

ஸ. ஜா:—ஆனால் என்னிடத்தில் இருப்பதை விட அதிகக் கெடுதல் அவனிடம் உண்டு என்று சொல்வது அவனை அறிவதாகுமா? அவன் எவ்வளவுக்கு வயதானவனோ அவ்வளவுக்கு நாம் இரக்கப் படத்தக்கவன். அவன் வெள்ளை மயிர் அதற்கு அத்தாட்சி. அவன் தாசிலோலன் என்பதை நான் முழுதும் ஆக்ஷேபிக்கிறேன். மதுக் குடிப்பது ஒரு குற்றமானால், பொல்லாதவர்களைக் கடவுள் காப்பாற்றட்டும். வயது சென்றவனாகவும், குஷியானவனாகவும் இருப்பது பாவமானால், நான் அறிந்த கிழங்களெல்லாம் அழிந்து போகட்டும். வயிறு பெருத்திருப்பது வெறுக்கத் தக்கதானால் ஃபாரோவின் (Pharoah)வின ஒல்லியான பசுத்தான் விரும்பத் தக்கது. இல்லை, என் அருமைத் தந்தாய். பீட்டோவை விரட்டுங்கள், பார்டெல்லொஃபை விரட்டுங்கள். பாயின்ஸை விரட்டுங்கள் (இவர்களெல்லாம் ஸர் ஜானின் கேர்ஷ்டியார்); ஆனால் இனிமையான ஜேக் ஃபால்ஸ்டாஃபை, அன்பான ஜேக் ஃபால்ஸ்டாஃபை, உண்மையான ஜேக் ஃபால்ஸ்டாஃபை, வீரன் ஜேக் ஃபால்ஸ்டாஃபை, வயோதிக ஜேக் ஃபால்ஸ்டாஃபை, உன் ஹேரியின் உயிர்த்தோழனை, துரத்த வேண்டாம். உங்கள் ஹேரியின் தோழமையின்றும் அவனைப் பிரிக்க வேண்டாம்.—உலகையே வேண்டுமானாலும் விரட்டுங்கள், அவனை மட்டும்......

இள:—அப்படியே செய்கிறேன் போ.

இந்த விதமான ஸர் ஜான் ஃபால்ஸ்டாஃபைப் பற்றிய மற்றொரு பகுதியைப் பின்னால் பார்ப்போம்.

---

# மரண சுகம்

(வித்துவான்-எம். சாம்பசிவம்.)

'மரணம், பயங்கரமானது என்று நினைப்பது பொருக்கி எடுத்த முட்டாள்தனம்; அது, இன்பமாக இருக்கும் என்று ஏன் நினைக்கக்கூடாது? நன்ருகத் தெரிந்து கொள்ளாத ஓர் விஷயத்தைப்பற்றி மனிதர்கள் எதற்காகக் கயிறுகட்டி விட்டுப் புரளி பண்ணுகிருர்கள்?' என்றெல்லாம் மரணத்தைப்பற்றி மேனுட்டுப்புலவர் ஒருவர் கூறும்போது மூட மக்களின்மேல் சீறி விழுகின்ருர்.

ஆமாம்; மரணத்தைப்பற்றி ஒன்றுந் தெரியாதவர்கள், 'அது, அப்படி இருக்கும்; இப்படி இருக்கும்; மிகப் பொல்லாதது; சகிக்க முடியாதது' என்று கூறிக் காது கொடுத்துக் கேட்கும் மக்களை நிலைகலங்கச் செய்து விடுவதைக் காட்டிலும் 'வாய்மூடி மௌனியாகி' யிருப்பது உண்மையாக எவ்வளவோ மேல். அக்கரையாக முன்னெச்சரிக்கை செய்ய அதைப்பற்றி ஒன்றுமே தெரியாத இவர்கள் யார்?

ஆழ்ந்து நோக்கினுல், 'மரண நிலையும், ஒருவித இன்பமே' என்ற முடிவிற்கு யாரும் வரலாம். ஆனுல், தற்கொலையும், அறியாமையால் ஏற்படும் மரணமும், தண்டனை மரணமும் எத்தகையன—எந்நிலையன என்பனபற்றிக் கூறுவது என் நோக்கமல்ல; எனினும், அத்தகைய செயற்கை மரணங்கள் உறுதியாகத் துன்பத்தைப் பயக்கின்றன என்பது சொல்லாமலேயே விளங்கும். அது பற்றித்தான் இயற்கை மரணத்தையும் தவருக நினைத்தனர் போலும், மக்கள்!

ஐந்து வயதிலும் ஏற்படலாம், ஐம்பது வயதிலும் உண்டாகலாம் இயற்கை மரணம்; நூறு வயதில்தான் இயற்கை மரணம் ஏற்படும் என்பது நியதியல்ல. காரணம், பழவினை வினை என்னும் அவரவர்களின் முன் வினையைப் பொறுத்ததே.

ஆகவே, சில மக்கள், துன்பம் வந்த காலத்து அதைச் சகிக்க சக்தி யில்லாமல், "ஆறிலும் சாவு! நூறிலும் சாவு" தானே! என்ற பொருளற்ற பழமொழியைக் கூறிக்கொண்டு, இறக்கத் துணிகின்றனர்; தற்கொலை செய்துகொள்ள முனைகின்றனர். இதற்குக் காரணம் என்ன?

இயற்கை மரணத்தையும், செயற்கை மரணத்தையும் மக்கள், சமமான நிலையில் வைத்து நினைப்பதே முக்கியமாகத் தற்கொலைக்கு அதிக ஏதுவாகிறது. இயற்கை மரணம் சுகமானது என்று அவர்கள் அறிவார்களானுல், தற்கொலை என்பதே ஒன்று இல்லாமற் போய்விடும்.

'செயற்கை மரணம், பயங்கரமானது; பெருந்துன்ப முடையது. இயற்கை மரணம், மிகச் சுலபமானது; இன்ப முடையது'

என்பதை தெய்வப்புலவர் திருவள்ளுவனார் எங்ஙனம் கூறுகிறார் என்பதை நோக்குவாம்.

"சாதலின் இன்னாதது இல்லை; இனிது அதூஉம்
ஈதல் இயையாக் கடை"

—குறள் எண்—230.

'ஒருவன், தற்கொலை செய்துகொண்டு இறப்பது போன்ற பெருந்துன்பம், வேறு ஒன்றுங் கிடையாது; என்றாலும், பிச்சைக் காரர், ஒரு பொருள் கேட்கும்போது, அதைக் கொடுக்க முடியா விட்டால், தற்கொலை செய்து கொள்வதே மேல்' என்று, தருமஞ் செய்வது நல்லது என்னும் 'ஈகை' அதிகாரத்தில், செயற்கை மரணத்தின் பயங்கரத்தை விளக்குகிறார்

அதே வள்ளுவராகிய பொய்யாமொழியார், 'நிலையாமை' என்னும் அதிகாரத்தில், இயற்கை மரணத்தின் சுலபத்தைச் சொல்லும்போது எங்ஙனம் கூறுகிறார், பாருங்கள்.

"உறங்குவது போலும் சாக்காடு; உறங்கி,
விழிப்பது போலும் பிறப்பு."

—குறள் எண் 339.

'ஒருவனுக்குத் தூக்கம் வருவதுபோல, இறப்பு வருதல்; தூங்கி, விழிப்பு வருவதுபோல, பிறப்பு வருதல்.'

அதாவது, ஒருவனுக்குத் தூக்கம் வருவதாக வைத்துக் கொள்வோம். அப்பொழுது அவனைத் தூங்க வேண்டாமென்று தடுத்தால், எவ்வளவு எரிச்சல் வரும், தடுப்பவர்மேல்? 'தூங்கு' என்று, அவனுக்கு ஒரு படுக்கையும் நாம் கொடுத்தால் அப் பொழுது அவன் எப்படி எவ்வளவு இன்பமாகத் தூங்குவான்? ஆகவே, தூங்குவதிலும் இன்பம் இருக்கிறதல்லவா? அதே போலத்தான், இயற்கையாகத்தானே வரும் இறப்பிலும், இன்பம் இருக்கிறதாம். தூக்கத்தில் நாம், எந்த இன்பத்தை அனுபவிக் கிறோம்? அந்த இன்பத்தைத்தான் இயற்கை மரணத்திலும் அனுபவிப்போம்!

பிறக்கும் போதும் அப்படித்தான்! தூங்கிவிட்டு, விழிக்கும் போது, எப்படி உடம்பு சுகநிலையில் இருக்கிறதோ, அப்படியே, இறப்பு வந்த பிற்பாடு வரக்கூடிய பிறப்பும்! பிறப்பில் துன்பம் இருப்பதா யிருந்தால் சிசுக்கள், துடித்து இறந்து விடாவா?

சிசுக்கள் பிறந்ததும், சில, கத்துவதற்குக் காரணம் வேறு: தாய் வயிற்றி லிருக்கும்போது இருந்த சீதோஷ்ண நிலைக்கும், பிறந்த பின் வெளியேயுள்ள சீதோஷ்ண நிலைக்கும் அதிக வேறு பாடு இருக்கிறதல்லவா? அதைத்தான் பிறந்ததும் குழந்தைகள் அழுவதற்குக் காரணமாகச் சொல்லுகிறார்கள்.

இன்னும், இயற்கைச்சாவு எதுபோலத் தெரியுமா? 'முட் டைக்குள் இருந்து குஞ்சு, வெளிவருவதுபோல! அல்லது கூண்டி

# வேலைக்குத் தகுந்த கூலி

(சி. மீனாட்சி அம்மாள்.)



"அதோ அங்கு நிற்கிறானே, அவன் யார்?"

"அவன் ஒரு பிச்சைக்காரன்."

"அவன் கையில் இருப்ப தென்ன?"

"அது ஒரு மண் சட்டி."

"அது எதற்காக?"

"கஞ்சியோ கூழோ கிடைத்ததை வாங்கிக் குடிப்பதற்காக."

"வீடுகள் தோறும் வாசற்படியண்டை ஏன் அப்படி வாயைப் பிளந்து கொண்டு நிற்கிறான்?"

"வீட்டார் ஏதாவது கொண்டு வந்து கொடுப்பார்களா என்று எதிர் பார்த்து."

"அவன் காலில் என்ன அத்தனை கட்டுகள்?"

"நாய்கள் கடித்த காயங்களை அப்படிக் கட்டி இருக்கிறான்."

"ஓகோ, பல நாய்கள் கடித்திருக்கின்றன போலும்! அப்படி அவன் கடிபடுவதற்கு காரண மென்ன?"

"அதுவா? அது ஒரு கதை. கேள் சொல்கிறேன்:—

"அவன் ஒரு பெரிய பணக்காரன். அவனுக்கு அழகிய மனைவியர் பலர் உண்டு;—அவர்கள் சாதாரணமாய்ப் பேசுவதே அவன் காதுக்குச் சங்கீதம் போல் இருக்கும். அவன் வீட்டில் நாள் தோறும் நெய் பால் முதலிய உயர்ந்த பொருள்களைக் கொண்டுதான் சமையலே நடக்கும்.

---

லிருந்து பறவை, வெளியே பறந்து செல்வதுபோல! எது? உடம்பிலிருந்து, இயற்கை மரணத்தின்போது உயிர் வெளிப்படு வதுதான்!' என்கிறார் நாயனார். உதாரணத்தின் மூலமாக, மரணம், சுலபம்; சுகம்' என்பதை எவ்வளவு அழகாகக் கூறுகிறார், அவர்?

"குடம்பை தனித்து ஒழிய புள் பறந்தற்றே;
உடம்பொடு உயிரிடை நட்பு."

—குறள் 338.

ஆகவே, மரணம், எத்தகையது என்று தெரிகிற தல்லவா? ஐய மிருந்தால் கேளுங்கள்; திருக்குறள் இருக்கவே இருக்கிறது. பயம் என்ன?

அவன் சாப்பிடுவது சாதாரண இலையில் அல்ல; தங்கத்தால் செய்யப் பட்ட வட்டிலில். சாப்பிடுவதுகூட தானாக எடுத்தல்ல, அப்படிச் செய்வதில் இன்பம் இல்லை என்பது அவன் கருத்து.

மனைவியர் எல்லாரும் அவன் பக்கத்தில் உட்கார்ந்து கொள்வார்கள். இன்பத்தைத் தரக்கூடிய பல வார்த்தைகளை வசனித்துக் கொண்டே மிக உபசாரமாக, ஒவ்வொரு பதார்த்தமாக எடுத்தெடுத்து ஊட்டுவார்கள்—அவ னும் மிக்க இன்பத்துடன் அவர்கள் முகங்களைப் பார்த்துக் கொண்டே உண்டு மகிழ்வான்.

இப்படி இருக்கும்போது ஒரு நாள் ஒரு கிழ யாசகன் வந்து, 'ஐயா, பசி காதை அடைக்கிறது. கொஞ்சம் ஆகாரம் ஏதேனும் கொடுங்கள்' என்று பரிதாபத்துடன் கெஞ்சிக் கேட்டான். பொன் வட்டிலில் பாலமுது சாப்பிட்டுக் கொண்டிருக்கும் அவனுக்கோ, பசி என்றால் என்ன என்றே தெரியாது. உடனே அவனுக்குப் பெருங் கோபம் வந்து விட்டது. "ஆகார மாவது கோரமாவது. வழியில் போகும் வீணன்களுக் கெல்லாம் என்ன வேலை; ஓடிப்போ! இல்லாவிட்டால் நாயை அவிழ்த்து விடச் சொல்லு வேன்" என்று சிடுசிடுத்தான். கிழவனுக்கு அதன்பின் அங்கு வேலை என்ன? அவன் போயே போய் விட்டான்."

"அவ்வளவு பெரிய பணக்காரன் இப்படி ஏன் இருக்கிறான்?"

"இல்லை; அவன் பணக்காரனாக இருந்தது இப்பொழுதல்ல. போன சன்மத்தில். அவன் தான் இந்த சன்மத்தில் இவ்வுருவத்தில் இப்படி வந்து யாசகம் செய்கிறான்.

அப்போது அவனுக்குப் பணிவிடை செய்வதற்குப் பலபேர் இருந்தார் கள்; இப்போது ஏகன். அப்போது பொற் கிண்ணம்; இப்போது மண் சட்டி. அப்போது நாயை அவிழ்த்து விடுவேன் என்று சொல்லத்தான் செய் தான்; இப்போது அவனை பல நாய்கள் கடித்தே விட்டன! இதுதான் கதை."

"ஆம்; அவன் தான் இவன் என்றும், அப்படிச் செய்தால் இப்படி வருமென்றும் உமக்குச் சொன்னது யார்?"

"எனக்கு வேறொருவரும் சொல்ல வில்லை; 'விவேக சிந்தாமணி' என் னும் புத்தகத்திலுள்ள கீழ்வரும் கவியைப் படித்துப் பாரும்."

"மண்ணார் சட்டி கரத்(து) ஏந்தி
மறநாய் கவ்வும் காலினராய்
அண்ணாந் தேங்கி இரப்பாரை
அறிந்தேம், அறிந்தேம் அம்மம்மா!
பண்ணார் மொழியார் பால்அடிசில்
பைம்பொன் கலத்தில் பரிந்(து) ஊட்ட,
உண்ணா நின்ற போ(து) ஒருவர்க்(கு)
உதவா மாந்தர் இவர்தாமே."

[மறநாய் = கொடுந்தன்மையுள்ள நாய்.]

# புதுக்கற்காலத்தில் பொலிதல்

(டி. பி. நவநீத கிருஷ்ணன், M. A.)



(சென்ற இதழின் தொடர்ச்சி.)

மண் பாண்டங்களை செய்ய அறிந்தமையின், மக்கள் வாழ்க்கையில் பலவகையான விளைவுகள் ஊன்றலாயின. சமையல் முறையே மாறுபட்டது. நாநாவிதமான ருசிகரமான ரசங்களையும், குழம்புகளையும், எளிதாயும் சிக்கனமாயும் வைக்க முடிந்தது. தானியங்கள், எண்ணெய், தேன், பால் இன்னோரன்னவற்றை ஊற்றி வைத்திருக்கவும், கெடாது சேமித்து வைத்திருக்கவும் சாடிகள்—பானைகள்—சட்டிகள்—குடங்கள்—மிடாக்கள் இன்னோரன்ன பலவகையான பாண்டங்களைச் செய்ய இயன்றது. உறுதியாய்ச் செய்யப்பட்ட கலங்களில், கனபதார்த்தங்களையும், திரவ பதார்த்தங்களையும் கலந்து காய்ச்சினதால், கண்டுபிடிக்கப்பட்ட விளைவுகளே, இயைபியலான அறிவை விதைத்தது எனலாம். இவ்வாறு ஆரம்பமான அறிவு பலவகைகளிலும் விரிந்து வளர்ந்துள்ளது. மேலும், பாண்டங்கள் செய்யும் தொழில் பாற்பட்ட செய்வினைகள், கற்பனா சக்தியையும் தூண்டி யெழுப்பின. பாண்டங்களை உருவாக்குதல், படைப்பு இயலான கலை. மங்கலும், ஈரமும் ஆனதான களிமண்ணினின்று, கெட்டியானதும், மெருகேறியதுமான பயனுறு பாண்டம் உண்டாதல், மண்ணினின்று மனிதன் ஏற்படுதல் போலுள்ளது. பாண்டத்தின் வடிவம், சுடப்படுதற்கு முன்னும், சுடப்பட்ட பின்னும் ஒரே விதமாயுள்ளது. ஆனால் அது வாக்கப்பட்ட பதார்த்தம் முற்றும் மாறுகின்றது. இது சடப்பொருள் மாறிடினும், உருவம் நிலையானது என்பதைக் காட்டுவது போலிருந்தது பல்வேறு சமயங்களின் பாற்பட்ட உபதேசங்களிலும், காவியங்களிலும், மண்பாண்டங்களை ஆக்குதல், சிருஷ்டிக் கிரியைக்கு உபமானமாய்க் காட்டப் பட்டுள்ளதே, மக்கள் உள்ளத்தில், பாண்டங்கள் செய்யப்படும் முறையைப் பற்றின கருத்து ஆழ்ந்து பதிந்து, சிந்தனையை மூட்டி, கற்பனையைத் தூண்டியுள்ளது என்பதற்குத் தக்க சான்றாம்.

பயிர்களினின்று நார், இழை இன்னோரன்னவற்றைப் பெற்றதாலும், சில விலங்குகளினின்று கம்பளி நூலைப் பெற்றதாலும், நெசவுக்கான தறி முதலான சாதனங்கள் கண்டு பிடிக்கப்பட்டன. இவையும், புதுக்கற்காலத்தினர், வல்லுனரான வினைஞர் எனப் பெருமை பாராட்டற்குகந்தவர் என்பதை நிலைநாட்டுகின்றன. எளிதானதெனத் தோன்றும் நெசவுத் தறி முறையும், கடினமான

விஞ்ஞானக் கருத்துக்கள் பலவற்றுளலானது. நெசவுத் தொழிலும் எளிதான வினை செய்வகையினதன்று.

வேளாண்மை, கால்நடைகளை வளர்த்தல், குசத் தொழில், நெசவுத் தொழில் இன்னோரன்னவற்றைப் பயிற்சி செய்து வந்த மக்கள் சமுதாயங்கள், நீல நதிக்கும் சிந்து நதிக்கும் இடையுள்ள பிரதேசங்களிலேயே முதன் முதலிருந்தன என மக்கள் உற்பத்தி நூலறிஞர் கூறுகின்றனர். இவ்வாருன தொழின்முறைப் பெருக்கம், மக்கள் தொகை பன்மடங்கு மிகுதற்குக் காரணமாயிற்று. புதுக்கற்காலத்தை விடப் பழங்கற்காலம் நூறுமடங்கு நீண்டிருந்தது; ஆயினும், பழங்கற்காலத்தை விடப் பதிஞயிரம் மடங்கு அதிகமான மக்கள் தொகையின் அடர்த்தி, புதுக்கற்காலத்தில் ஏற்பட்டது என மக்கள் உற்பத்தி நூலறிஞர் கணக்கிட்டுள்ளனர். இவ்விவரம், மேற்கூறப்பட்ட தொழின் முறைகளின் மகத்துவத்தை நன்கு எடுத்துக் காட்டுகின்றது. மக்கள் தொகை மிகையாயினும், புதுக்கற்காலத்து மக்கள் வசித்து வந்த கிராமங்கள் மிகச் சிற்றூர்களாகவே யிருந்தன. இருநூறு குடும்பங்களுக்கு அதிகமானவரிருந்த ஊர்கள் காணப் படவில்லை யென்று மக்கள் உற்பத்தி நூலறிஞர் கண்டுள்ளனர்.

நெசவுத் தொழிலையும், குசத் தொழிலையும், அக்காலத்து பெண்டிரே செய்து வந்தனர் என்பதைக் காட்டும் சான்றுகள் உள. மக்கள் வாழ்ந்த குடில்களுக்கு முன்புறத்தில், பசும்புற் றரையான கிராமப் பொது நிலம் இருந்தது. ஆங்கு, மக்கள் எல்லாம் கூடி, மகிழ்ச்சியுடன் உரையாடிக் கொண்டே, தத்தம் வேலைகளில் முனைந்தனர். பெற்றோர்கள், பிள்ளைகளுக்கு, நேரே தொழில் செய்து காண்பித்தே, வேலை செய்யக் கற்பித்துப் பயிற்றுவித்தனர். ஒவ்வொரு ஊராரும், இதர ஊராரின் துணையை நாடாது தம் சமுதாயத்தைத் தாமே ஆதரித்து வந்தனர். ஆயினும், ஒரு கிராமத்தினர் இதரவற்றினருடன் எவ்வகையான தொடர்புமின்றி இருக்கவில்லை. பல ஊர்களிடைப் போக்குவரத்து இருந்தது. ஆனல் வணிகவியலான தொடர்பு எதுவும் இல்லை. ஒரு ஊரார் வேருேர் ஊராருடன் போரிட்டனர் என்பதைக் காட்டும் சான்று ஒன்றேனும் கிடைக்கப்பட வில்லை. அகப்பட்ட ஆயுதங்கள், வேட்டை—வேளாண்மை—இன்னோரன்னவற் றிற் கேற்ற வகையானவையா யுள்ளனவே யன்றி, போர்முறையில் பிரயோகிக்கப்பட 'வல்லவையாயில்லை. ஓரூரில், ஒரு வேலைக்காகக் கையாளப்பட்ட கருவிகள், வேருேரூரில், அதே வேலைக்காகக் கையாளப்பட்ட கருவிகளினின்று, சிறிது வேறு பட்ட மாதிரியா யுள்ளன. இவ்வகையிலேயே, பல வேலைகளுக்கான கருவிகளும், ஊருக்கு ஊர் சிறிது வேறுபட்ட விதமாக வுள்ளன. அதாவது, ஒவ்வோர் ஊராரும், தத்தமக் கென்ருன தனித்தனி விதமான கருவிகளைக் கொண்டு வேலை செய்து வந்தனர். எனவே, ஒவ்வொரு கிராமத்தினரும், தம்மூர் தம்மூர் என்ற தனிப்பெருமையுட னிருந்தனர் என அறியலாம். இதனின்று,

ஒவ்வொரு ஊராரும், நன்கு பிணைக்கப்பட்ட சமுதாயமா யிருந்தனர் என ஏற்படுகின்றது. இவ்வாறான கட்டுப்பாடான சமுதாயம், திடமான தலைமுறைத் தத்துவமான சம்பிரதாயங்கள் வழங்குவதனாலேயே ஏற்படும். ஆதலின், அச்சமுதாயங்களிலுள்ள மக்களின் வாழ்க்கை, பரம்பரையியலான ஐதீகத்திற்குட்பட்டிருந்தது என எண்ண இடமுண்டு. அம்மக்களின் பழக்க வழக்கங்கள், நடை—உடை—பாவனைகள், தொழின் முறைகள், இன்னோரன்னவை யெல்லாம், பெரிதும் பரம்பரை முறையை யொட்டியே யிருக்கும் எனும் முடிவைப் பெறுகிறோம். பல் வேறு ஊர்களில் செய்யப்பட்ட பண்டங்களும் வெவ்வேறு விதமாயுள்ளன என்பதும், நாம் மேலே பெற்ற முடிவை ஆதரிக்கின்றது. பரம்பரையான வற்றினின்று, வேறுபட்ட புதுமுறைகளைக் கண்டு பிடித்த இளங்காளையர், தம்மூரிலேயே அவற்றைக் கையாள் இயலா திருந்தது. ஏனெனில், அவ்வாறு கையாண்டால் அவர்கள் பரம்பரையான சம்பிரதாயத்தை இகழ்ந்தவரென்று விலக்கப் படுவார்கள். ஆதலின், அவ்வாறு தம்மூரிலேயே இருக்க இயலாதவர் பலர் ஒன்று சேர்ந்து, வேற்றுப் புலங்களுக்குச் சென்று, புத்தூர் நிறுவி, புது முறைகளை அமுலுக்குக் கொணர்ந்தனர். ஆனால், அவர்கள் முதிர்ந்தோரான போது, பரம்பரையின் ஆதிக்கத்திற்கு மீண்டும் உள்ளாயினர். பரம்பரையாய்ப் பதிந்து வந்தவற்றினின்று எளிதில் விடுபடுதல் அரிது. எனவே, அவ்வூர்களிலும், புதுமைகள் கண்டு பிடித்த காளையர், மேலும் வேற்றுப்புலங்களை நாட வேண்டியதாயிற்று. அவ்வாறு உலகின் பல பாகங்களிலும் ஊர்கள் ஏற்பட்டன. இவ் வகையில் பரவுதற்கு, அக்காலத்தில் உலகில் இட மிருந்தது.

புதுக் கற்காலத்தில், வினைச் செய்வகை யானவையான பெருந்தொழின் முறைகள் பல நிறுவப்பட்டன. மக்கள் தொகை அளவு கடந்து அதிகரித்த காலப்பகுதியும் அதுவே. அச் சகாப்தத்தில், மக்களிடை, சமுதாய வியலான பற்று ஏற்பட்டது; பரம்பரையின் மகத்துவம் மிகுந்தது: ஆனால் புதுமைகள் கண்டு பிடித்தவர்க்கும் இட மிருந்தது; மக்கள் போரிடாது சமாதானத்துடன் வாழ்ந்தனர்; எங்கும், அமைதியும், வளப்பமும், இன்பமும் நிலவி யிருந்தது. அச் சகாப்தத்தின் இறுதிப்பகுதி, மேலும் மேன்மையான வினைச் செய்வகைகள், விரைவினில் தொடர்ந்த வண்ணமாய்க் கண்டு பிடிக்கப்பட்ட பெருமையுடன் விளங்கிற்று. அவற்றின் விளைவுகள், அச் சகாப்தத்தையே முடிவுகளுக்குக் கொணர்ந்து விட்டன எனலாம். அப்பொழுது கண்டு பிடிக்கப்பட்டப் பல புதுமைக ளினின்றெழுந்த பிரகாசமான சோதியில், புதுக் கற்காலம் மறைந்து, உலோக காலம் பிறந்தது எனலாம்.

புதுக் கற்காலத்திலிருந்த நிலைமை யென நாம் மேலே சுருக்கமாய்க் குறிப்பிட்ட நல் வாழ்க்கையைப்பற்றி எண்ணுங்கால், அக் காலம் மறைந்து, உலோக காலம் பிறந்து, பின்னர் இக் காலம்

ஏன் வந்தது என்ற ஏக்கம் தோன்றுகின்றது. தற்காலத்தில் நாம் எங்கும் காணும் கொடுமையே, நம்மை இவ்வாறு எண்ணச் செய்கின்றது. இதனின்று, புதுக் கற்காலத்திற்குப் பின் தோன்றிய பலவற்றையும் அறவே ஒழித்து விட்டு, அக் காலத்து வாழ்க்கைக்கு மீள்வதே நன்று எனப் பலர் திடமான கருத்தை வெளிப்படுத்துவதில் வியப் பொன்றுமில்லை. ஆனால், வேறு வழியில் சிந்தனை செய்வோமாயின், "காலப்போக்கை யாரால் நிறுத்த இயலும்? நாம் விரும்புவதால், இன்றை நிலைக்கச் செய்து, நாளை வராது தடுக்க முடியுமா? சென்ற காலத்திற்கு மீள்தல் சாத்தியமா?" என்ற வினாக்கள் எதிர்ப்படுகின்றன. அப் பொழுது, "காலம் ஒரே நேராய்ச் செல்லாது, வட்டமாய்ச் செல்வ தால், காலச்சக்கிரம் என்ற கருத்து எங்கும் பரவி யுள்ளது. அவ் வாறானால், காலசக்கிரம் சுழன்று, புதுக்கற்காலத்தை மீண்டும் அடையலாம்' என்று தோன்றுகின்றது. ஆனால், மேலும் சிந் தனை செய்தால், 'அக் கருத்து கற்பனை யியலாயுள்ளது. உள் ளதைக்கொண்டே ஆராயலாம்' எனும் எண்ணம் எழுகின்றது. இவ்வாறு ஆராயப்புகின் 'புதுக் கற்காலத்தின் மங்களகரமான வாழ்க்கைக்கான காரணங்கள் எவை?' யென்னும் வழியே கருத் தைச் செலுத்தவேண்டும். அங்ஙனம் செய்வோமாயின், புதுக் கற் காலத்தில், பொதுநலம் தந்நலம் என்ற வேற்றுமை யில்லை; தந் நலம் மட்டுமே யிருந்தது. ஒவ்வொருவரும் தன் கையே தனக்குதவி யென்றெண்ணிவாழ்ந்தனர். அதனால் வேலைகளில் ஒத்துழைப்பு-கூட்டுறவும்-என்ற கருத்தே முதலில் தோன்றவில்லை. பிறர் பொரு ளைக் கவர்ந்துண்ணுவதும்-பிறர் உழைப்பால் பிழைப்பதென்பதும் பிறரையண்டி வயிறு வளர்ப்ப தென்பதும்-இன்னோரன்னவுமான பொல்லாங்குகள் அக்காலத்து ஏற்படவில்லை; மக்கள் உழைப்பு முறையும், சமுதாய அமைப்பு முறையும் தக்க தொடர்புட னிருந் தன; சமுதாயத்தின் மீது ஆட்சி செலுத்திப் பிழைத்த அதிகார வர்க்கத்தினர் இல்லை; தொழிற் சிறப்பின் பொருட்டு, தொழின் முறை ஒழுங்குற நடைபெறுமாறு செய்த, கைதேர்ந்த வினைஞ ரான விற்பன்னரே ஒரு வகையான தலைவரா யிருந்தனர்; விழாக் களும் களிக்கூத்துக்களும், சிலர்க்கு மட்டுமேயன்றி பலர்க்கு மான சமுதாயப் பொதுக் கொண்டாட்டங்களா யிருந்தன; வேலையுடன் உல்லாச சல்லாபமும் இருந்தது; ஒரு சமுதாயத்திருந்த மக்களின் நாட்டொறு வாழ்க்கையில் ஏற்றத் தாழ்வுகள் இல்லை; கிடைத்த உணவும், பெற்ற பல நலங்களும் எல்லோர்க்கும் பொதுவான ஒரே வகையானவையா யிருந்தன! என்ற முடிவுகளைப் பெறு கிறோம். சுருங்கக்கூறின், அக்காலத்து மக்களின் வாழ்க்கையில், அவர்களது, நன்மை-தீமை யறியும் பகுத்தறிவு, அல்லது விவே கம்,—வினை செயலியலான அறிவு அல்லது விஞ்ஞானம், வினை செய்வகைகள் அல்லது தொழில்-தொழின்முறை ஒழுங்கு-சமு தாய அமைப்பு முறை-சமுதாய வழக்கங்கள் என்பவை யாவும் சீருடன் இசைந்திருந்தன. தற்காலத்திலோ, இவ் வமிசங்கள், எல்லாம் சீர்குலைந்து, தாரதம்மிய மதிகப்பட்டு, இசைப்பொருத்

தம் வழுவி, ஒன்றுட்னென்று முரண்பட்டு, இயைவின்றிக் கிடக்கின்றன. இந்நிலைமையில், ஒவ்வொரு அமிசமும், திசைதப்பி வழி யறியாது தத்தளித்துக் கொண்டுள்ளது. அக் கொந்தளிப்பே, இன்று உலகிலுள்ள பல கோளாறுகளையும் விளைவித்துள்ளது. சீர்கேடான இந் நிலைமை மாறி, பல அமிசங்களும் தத்தமக்கான சம நிலையை யறிந்து, எல்லாம் சமனுகும்போது, உலகில் நிலையான சமாதானம் ஏற்படும். அந்நிலைமையை எய்தும் நோக்கத்துடன், மக்கள் எல்லோரும் பாடுபட வேண்டும். குறிக்கப்பட்ட அமிசங்கள் ஒவ்வொன்றிலும் தனித்தனியே, புதுக் கற்காலத்திருந்ததை விடப் பன்மடங்கு அதிகமான பெருக்கும் ஏற்பட்டுள்ளது. இவ்வாறு காலாந்திரத்தில் திரட்டப்பட்டுள்ளதான, விவேகம்-விஞ்ஞானம்-தொழில்- ஒழுங்குமுறை என்பவற்றின் பாற்பட்ட, அரும் பொருள்களைக் கொண்டு பல வகைகளிலும் சிறந்த நல் வாழ்க்கையை பல்லோர்க்கும் அளிக்க முடியும். அது நிறைவேற வேண்டுமானால், பல துறைகளிலும் மேன்மையானவரான பலரும் ஒன்று கூடி, உலகை யாளும் பொறுப்பையேற்கவேண்டும். முன்னேற்பாடுடன் திட்டமாக வரை யறுக்கப்பட்டதான நல்ல ஒழுங்குமுறையை நிறுவி, உலகை அவர்கள் ஆளவேண்டும். அதற்கேற்ப,பொதுமக்களின் நோக்கமும் பரந்து உலகப் பொது நோக்கமாய் விரியும். ஆனல், சமூகத்தின் அடிப்படையான குழாம், சிறு சமுதாயமா யிருத்தலே நன்று. ஏனெனில், போட்டியின்றி வாழும் சிறு சமுதாயங்கள் பலவே, இன்பம் நிறைந்த நல்வாழ்க்கைக்கு ஏற்றவை யென்பதே, புதுக் கற்கால மக்களிட மிருந்து நாம் கற்கவேண்டிய படிப்பினை.

---

## "செந்திருவும் தேன் வண்டும்"

வெண்ணிற முழுமதி செந்நிறக் கமலம்
இவற்றிடை அமர்ந்துள இளந்திரு அழகி!
உன்திரு முகத்திற்(கு) உவமை உரைப்பன்.
நின்முகம் அழகிலும் நிறைவிலும் மதியையும்
நிறத்திலும் இயலிலும் மலரையும் நிகர்க்கும்
உன்முகம் மலர்தனை ஒப்பதால் வந்துள
சங்கடம் ஒன்றினைச் சற்றே கவனி
நீயும் கமலத்தில் நிற்கின்றனை!
நின்கரந் தனிலும் திகழ்வது கமலம்.
வண்டுகள் தேன்பெற கமலம் நோக்கியே
வந்திடும்; அப்பொழு(து) உன்முகம் நோக்கியும்
வரும் வண்டுகட்கு மதுவளியாமல்
ஏமாற்றுவது சரியோ.........?

—"தமிழ்ப் பித்தன்"

# பூப் பந்து வித்தை

(இரட்டணை—ஆர். ருக்மணி)



'பாட்மின்டன் கோர்ட்'டிலே நாள் தவருமல் உதை வாங்கித் தேய்கிறதே, அந்தப் பூப் பந்தின் சங்கதியை மட்டுமல்ல, அதை வைத்துக் கொண்டு ஆடுகிருர்களே, அந்தச் சிங்கங்களுள் 'ஒருவர்' ஆகிய என் கணவரைப் பற்றியும் இரண்டொரு வார்த்தை:

என் கணவர் இருக்கிருரே—அவர் தான், நீங்கள் நினைக்கும் 'சந்தி குமார்' என்கிற பேர்வழி—அவர், 'பாட்' என்கிற 'சல்லடைத் துடுப்பை'த் தூக்கிக்கொண்டு, ஆடம்பரங்களோடு கிளம்பும்போது பார்க்க வேண்டுமே, அடடா! அசல் சிங்கம் என்ருல் சிங்கந்தான், போங்கள்.

ஆனல், 'ஆட்டத்தில் எப்படி' என்று, 'டக்' என்று கேட்டு விடாதீர்கள். சாவதானமாகத்தான் சொல்வேன். இஷ்டம் இருந்தால் கேளுங்கள். இல்லாவிட்டால் நேரே வந்து, ஆடுவதைப் பார்த்துக் கொள்ளுங்கள், அவ்வளவு தான்.

அவர் சிறு வயதில், முழுமையும் பழக வில்லையாம். ஆமாம், அப்பொழுது ஜோலி இருந்தது! அதனலே தான் அவர்;.........

இப்பொழுது பந்து விளையாடும் இடத்திற்கே வந்து விட்டோம். நம் எதிரில் இப்பொழுது ஆடத் தெரிந்தவர்களும், தெரியாதவர்களும், தெரிந்ததுபோல் பாவனை செய்து கொண்டிருப்பவர்களும், அந்த ஆட்டத்தைக் கண்டு ரஸித்துவிட்டுப் போக வந்த புலிகளும் (அவர்களை இகழ வேண்டுமென்பது என் கருத்தல்ல), பந்து எடுத்துப் போடும் மனித வண்டுகளும், இதையெல்லாம் விந்தையாக வாயைப் பிளந்து கொண்டு, கூர்ந்து நோக்கும் பட்டிக்காட்டுப் பலராமன், பாவாடை, முனியன், முருவன், கருப்பன், அண்ணுசாமி, அய்யாசாமி முதலிய நம் அருமைச் சகோதரர்களும் ஆக எல்லோருமாக இதோ தயாராக நிற்கிருர்கள். இனி ஆட்டம் ஆரம்பிக்கப் போகிறது.

ஆகா! இந்தப் பூப் பந்துதான் என்ன பாபம் செய்ததோ! போகின்ற இடத்திலெல்லாம் 'கல்தா' பெற்றுக் கொண்டு திரும்புவதற்கு? ஆனல், ஒன்று: அது, உதை வாங்கிக் கொண்டு திரும்பும் போதெல்லாம் என் கணவரை நினைக்கும். அவரிடம் சென்ருல், இடையில் ஒரு நிமிஷமாவது விடுமுறை ஏற்படுமல்லவா, அதற்காகத்தான்.

கையில் பட்டைக்கத்தி ஏந்தி நிற்கும் 'காத்தவராயன்', 'போத்து ராஜா', 'ஐயனரப்பன்' முதலிய நமது சொந்தச் சாமி

களின் சிலைபோல, என் கணவரும் கையில் 'பாட்'டை வைத்துக் கொண்டு, பந்து எப்பொழுது வரும் என்று காத்துக்கொண்டிருப்பதோடு, வந்த பந்தைப் பக்கத்தில் ஆடுபவர்கள், 'கவர்' பண்ணிக் கொள்ளாமல் இருக்க வேண்டுமே, தெய்வமே! என்றும் ஏங்கிக்கொண்டு நிற்கிறார். இப்படி நினைக்கும்போதே, அதோ! 'என் கணவர்' என்று கூடப் பார்க்காமல், அவர் பந்தை, இரண்டு சங்கை கெட்டதுகள், 'கவர்' பண்ணுகின்றன; இதற்கு என்ன என்பது!

சீ! பெண்களாகிய 'நாங்கள்' ஆடும் பந்தை, இந்த வெட்கம் கெட்டதுகள் ஆடுவது மல்லாமல், என் கணவரையும் புறக்கணிக்கின்றன! இது, என்ன அநியாயம்? கேள்வி முறை யில்லையா?

ஆகா! அதோ! என் கணவரை நோக்கி, ஆகாயத்திலிருந்து ஓர் பந்து தலை கிழாகச் சுழன்று கொண்டு வருகிறது. சரி! என் கணவர், அதை 'கட்' பண்ணப் போகிறார். ஆகா! வந்து விட்டது! ஐயையோ......?......?......?...பந்தைக் கீழே விட்டு விட்டு, 'பாட்'டை ஆகாயத்தில் விசிறி விட்டாரே!

100 ஆயிர ரூபாய் ஏக நிமிஷத்தில் நஷ்டமாய் விட்டதுபோலக் கத்திவிட்டு, என் கணவரின் 'பார்ட்டி', ஏன் அப்படி முணுமுணுத்துக் கொண்டு உருமுகிறது? இதுகள், ஒரு பந்தைக்கூட கீழே விட்டதில்லையா என்று நான் கேட்கிறேன்.

"ஏஞ் சார்! ஒங்களுக்கு ஆடத் தெரியாட்டிப் போனா, பேசாமே வெலகி புடுங்களேஞ் சார்! நெல்ல பந்தெ கெடுத்துடறங்களே!,' என்றது, ஒரு குரல்.

"அட; அவருக்குப் பழக்க மில்லாட்டிப் போனா, எப்படிடா எடுப்பாரு?" என்று, அவமானப் படுத்தியது, மற்றொரு குரல்.

அதே சமயத்தில், என் கணவரின் முகத்தைப் பார்க்கச் சகிக்காமலோ, எதனாலோ கண்ணை மூடிக் கவிழ்ந்து கொண்டன, சில தலைகள்! வெட்கமாம்!

சரி, இதெல்லாம் போகட்டும். மேலும் பார்ப்போம். ஆட்டம் நடந்து கொண்டிருக்கிறது. ஆடிக்கொண்டே என் கணவர் நினைக்கிறார்:

"சரி! இவர்களை நோவதில் புண்ணிய மில்லை. இன்னும் ஒரே மாதத்தில்......? இருக்கட்டும். வெறும், வெறும், வெறும் 'ஷாட், கட்'டாகக் கொடுத்து, இவர்களைப் பிரமிக்க வைத்து, திணற அடிக்கிறேன். தோல்வி வெற்றிக் கறிகுறி! என்பதை இவர்கள், மறந்து விட்டார்கள். சரியான புத்தி புகட்டுகிறேன். இல்லா விட்டால், இந்த—நேத்துப் பிறந்த பயல்களெல்......"

ஆகா! இதோ ஓர் பந்து என் கணவரை நோக்கி வந்து கொண் டிருக்கிறது. சரியாக என் கணவர், அடித்து விடுவ

ராலும் அதை, அவர்கள் எல்லோருக்கும் சரியான 'சாட்டை' கொடுத்தது போலாகும். என்ன பண்ணுகிறாரோ, பார்ப்போம்:

ஐயையோ !......பதினைந்து கஜம் தள்ளி, அவுட் ! அசட்டை, துயரம், விசனம், அவமானம், பங்கம், அங்கை, சங்கை, மானம் இன்னும் என்னென்ன விதம் உண்டோ அவ்வளவோடு, ஊமைத் தைரியமும் காணப்பட்டன, என் கணவர் முகத்தில்; ஈயும் ஆட வில்லை; எறும்பும் மேயவில்லை. அதில்; எள்ளு போட்டால் எள்ளு பொறியும்; துள்ளியும் விழும்; கொள்ளு போட்டால் கொள்ளும் வெடிக்கும்; சிதறியும் ஓடும். அப்படி, ருத்ராகார மாகவும் இருந் தது, அவர் முகம் !

சரி, நல்ல காலம் பிறந்து விட்டது; இல்லா விட்டால் என் கணவருக்கு 'ரோஷம்' வருமா ? இனிமேல், 'விஷயம்' சரியாகக் கவனிக்கப் படும் என்று எதிர் பார்த்தேன். அதே சமயத்தில், எதிரிகள் என் கணவனால் அடையப் போகும் அவமானங்களைக் கற்பனை செய்து பார்த்தேன்; 'களுக்'கென்று சிரிப்பு வந்தது; சிரித்து விட்டேன். நல்ல காலமாக—யாரும் கவனிக்க வில்லை; அந்த மட்டில் பிழைத்தேன்.

அட்டா ! நான், சென்னையில் படித்துக்கொண் டிருக்கும் போர்து, மாலை நேரத்தில் எத்தனைப் பூப் பந்துகளைக் 'கொட்டைப் பாக்கு'களாகத் தேய வைத்திருப்பேன்;' விசனஞ் சுமக்கும் மனி தனைப் போலல்லவா தேய்கின்றன, இப் பந்துகள் ! சௌந்தரிய மிழந்த கிழவிகள் போலல்லவா, முடிவடைகின்றன !

இதோ, என் கண் முன், பத்து ஆண்களின் 'சல்லடைத் துடுப்பிலே', இன்று இந்த மஞ்சள் மங்கை (பூப் பந்தைத்தான்), வித்தை காட்டி நர்த்தனம் புரிகிறாள். இவளின் முடிவும் அது தானே !...........அந்தோ ! பூப் பந்தே ! உன் கதி........!

ஆமாம், அந்தப் பூப் பந்திற்கு அதுவும் வேண்டும்; அதற்கு மேலும் வேண்டும். மற்றவர்கள் முடுக்கினால், ஜோராய்ச் சென்று 'நெட்'டைத் தாண்டியதும் 'நறுக்'கென்று கீழ்நோக்கிப் பாய் கிறதே ! என் கணவர் தூரத்தினால் மட்டும் ஏன், திசைகளை நாடிச் சென்று, ஒரு நிமிஷம் ஓய்வு எடுத்துக் கொள்கிறது ! நயவஞ்சகப் பந்து !

பூப் பந்து வித்தையின் ரகஸ்யமே தனி ! அந்த ரகஸ்யத்தை அறிய விருப்ப முள்ளவர்கள், 'பாட்'டும், கையுமாகக் குறைந்தது ஆறுமாதமாகிலும் திரியவேண்டியது தான்.

# வார்தா நினைவுகள்

("சமூகத்தொண்டன்.")



## அடிகள் அளித்த அறிவுரை

"நீங்கள் வார்தாவில் இருந்தீர்களே அடிகளைத் தரிசிக்கும் பேறு வாய்க்க வில்லையோ" வென்று வினவ வாசகர் கட்கு வாயூறுவது இயல்பு. ஆம், தரிசித்தோம்; ஒரு முறை இரு முறை யல்ல. எத்தனையோ முறை. நாங்கள் அடிகளைத் தரிசனம் செய்யாமல் ஊர்திரும்பி யிருந்தால் எங்கள் செயல், "கலியாண சந் தடியில் தாலி கட்ட மறந்த" கதை போலன்றோ ஆயிருக்கும். பல தட்வை நாங்கள் அடிகளைத் தரிசித்தோம். ஆனாலும், ஒரே ஒரு தடவையில்தான் அடிகள் எங்களுடன் பேசினார்.

ஒரு நாள் மாலைப் பிரார்த்தனைக்குப் பிறகு திரு. பரதன் குமரப்பா அவர்கள், எங்களுக்குச் செய்தி தெரிவிக்க விருப்ப தாய் அறிவித்தார். உடனே நாங்கள் எங்கள் காதுகளைத் தீட்டிக் கொண்டோம். ஏன்? அவர் ஆங்கிலத்தில், பேசும்போது கட்டுக்கடங்கா வெள்ளம் போல் சொற்றொடர்கள் பொங்கும். அவர் சொன்னார், "அன்பர்களே, நான் சொல்லும் நற்செய்தி உங்களுக்கு மகிழ்ச்சியளிக்கும். அதாவது காந்தியடிகள், கிரா மத் தொண்டர்களாகிய உங்களிடம் ஏதோ பேசவேண்டு மென்று விரும்பி, உங்களை யழைத்திருக்கிறார். நீங்கள் அனைவரும் நாளை மாலை 4 மணிக்கு சேவா கிராமத்தில் இருத்தல் வேண்டும். உங் கள் கருத்தை வெளியிடுங்கள்; நாளைக் காலையில் அவருக்கு நான் கடிதம் எழுதுதல் கூடும்" என்றார். உடனே ஒரே ஆரவாரம்! அது, எங்கள் விருப்பத்திற்கு அறிகுறி.

அடுத்த நாள் மனோகரமான மாலை வேளை! சேவாகிராமத்தில் திரு. மகாதேவ தேசாயின் காரியாலயத்திற்கு முன் எங்களுக் கென்றே ஒதுக்கப்பட்டிருந்த விடத்தில் ஈச்சம்பாய்களை விரித்துக் கொண்டு உட்கார்ந்தோம். மணியாய் விட்டது; அடிகள் வரு வார் என்று ஆவலோடு அவர் வரும் வழியில் விழி வைத்து நோக்கினோம். நேரம் ஒவ்வொரு நிமிஷமாய் நகர்ந்து கொண் டிருந்தது. அடிகள் வந்தாரில்லை. பொறுமை யிழந்த சிலர் சென்று பார்த்தும் வரலாயினர். வந்தாரோ? இல்லை. அடிகள் காலந்தவறாது கருமம் புரிபவரன்றோ! ஆ! அதோ; அடிகள் வந்து விட்டார்! ஆஹா! என்ன மிடுக்கு நடை! அவசரமாய் நடந்து வந்து எங்களை நெருங்கி விட்டார். கையில் ஒரு தடி. முழங்கால் வரை வேஷ்டி. மேலே ஒரு போர்வை. அதோ, அங்கு மேற்கே சாய்ந்துகொண் டிருக்கும் சூரிய வொளியையும் மங்கச் செய்யும் பொங்கும் புன்முறுவல்! ஆக இவற்றோடு, "நீங்கள் நேரத்தோடு வந்து காத்திருக்கிறீர்களே; நான் வர

நாழிகையாய் விட்டது. இது நமது நாட்டு வழக்கம். (இடுப்பி லிருந்த கடிகாரத்தை எடுத்துப் பார்த்து) பத்து நிமிடம் தாமதித்து வந்தேன். இதற்கு என்னை மன்னிக்க முடியுமா?" என்னும் வார்த்தை அந்தப் பவள வாயினின்று முத்துக்கள் போல் உதிர எங்களுக் கிடையில் வந்து பாயில் அமர முயன்றார்.

"இல்லை, தங்களை மேலே உட்காரும்படி இறைஞ்சுகிறோம். அப்போது தான் தங்கள் முகத்தை நாங்கள் அனைவரும் காண முடியும்" என்று விண்ணப்பித்துக் கொண்டோம். அடிகளும் எங்கள் இறைஞ்சுதலுக்கு இணங்கி எதிரிலிருந்த நான்கடி உயரத் திண்ணைமீது விரித்திருந்த மெல்லிய பஞ்சு மெத்தையில் எழுந்தருளினார். அடிகளுக்குப் பின்வந்த அம்மையார்: திரு சுசீலா நாயர் காகிதத் தாளும் பென்சிலும் கொண்ட கையுடன் வந்து திண்ணையின் மீது சாய்ந்து நின்றார். அப்போது அடிகள், "அன்புடைத் தொண்டர்களே! உங்களை இங்கு காண என்னுள்ளம் மகிழ்கின்றது. உங்களுக் கென்று சில சொல்ல விரும்பி, டாக்டருக்கு எழுதினேன். நீங்கள் வந்திருக்கிறீர்கள். இப்போது நானே உங்களுக்குத் தொகுத்து சொல்லுவதை விட, நீங்களே என்னை வினவுங்கள். நான் பதிலிறுக்கின்றேன்" என்றார்.

எங்களுக்குப் பக்கத்தில், இந்திய ஊழியர் சங்கத்தின் முக்கிய உறுப்பினரான திரு. P. கோதண்டராவ் அவர்களும் வந்து அமர்ந்திருந்தார். அவர், ஒரு பரம பக்தன். கடவுள் சந்நிதியில் பணிவுடன் இருப்பதுபோல் உட்கார்ந்திருந்தார். திரு. சுசீலா. நாயர் நின்ற வண்ணமே அவசரம் அவசரமாய் எழுதலானார். அப்போது எங்களில் ஒருவர் எழுந்து, "என்ன மொழியில் பேசுவது?" என்றார்.

"எனக்கு ஹிந்தியில் பேசவே விருப்பம். ஆனால், தென்னிந்தியாவிலிருந்து இங்கு வந்துள்ளோர் தடை சொல்லக் கூடுமாதலால், எம்மொழியில் பேசுவது என்பதை நீங்களே தீர்மானித்து விட வேண்டும்" என்றார் அடிகள். உடனே, தமிழ்க்கத்தைச் சேர்ந்த திரு. கிருஷ்ணன் எழுந்து சென்னை மாகாணத்தாராகிய நாங்களும், ஹிந்தியில் சொல்லுவதைப் புரிந்து கொள்ளக் கூடுமாமையால், தாங்கள் ஹிந்தியில் பேசுவதில் நாங்கள் ஆட்சேபம் கூற விரும்ப வில்லை" என்றார். அப்போது எங்களில் ஒரு நண்பர் எழுந்து "கிராம சேவகன் என்றால் என்ன?" என்றார். ஹிந்தியில்.

அடிகளும் ஹிந்தியிலேயே விடை புகன்றார். அவர் விடையாவது—"கிராம சேவகன் என்றால், வாருகோல் கொண்டு ஓடி கிராமத்தைத் துப்புரவு செய்தல், நோய்வாய்ப்பட்டுத் தவிக்கும் கிராம மக்களுக்கு மருந்து தேடிக் கொடுத்தல், கிராம மக்களுக்குச் சுகாதார முறைகளை எடுத்து இதம்பட விளக்கி, அவர்களை அப்படியே நடக்கச் செய்தல், ஆதரவற்ற மக்களுக்கு ஆவன வெல்லாம் செய்தல், ஆக இவை. இப்படிச் செய்ய அவன்

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

## (சி. பி. ஆனந்தம்.)



### மேலைப்புலவர் கண்ட கோள்கள்

சமீபத்தில் இரண்டு நூற்றாண்டுகளுக்குள்—அதாவது பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிக் காற்பகுதி முதல் நிகழும் இவ் இருபதாம் நூற்றாண்டின் இரண்டாவது காற் பகுதியின் தொடக்கம் மட்டும் மூன்று நூதனக்கோள்களை மேலை நாட்டுப் புலவர்கள் கண்டிருக்கின்றனர். இவை தாம் யுரேனஸ்-நெப்டியூன்-ப்ளூட்டோ என்பவைகளாகும். இவை கிழக்கில் கொள்ளப் பெறும் நவக்கிரகங்களுள்—ஒன்பது கோள்களுள் சேர்ந்தவைகளா வென்பது சற்று சிந்திக்கப்பட வேண்டியதே.

கிழக்கில்-இந்தியா தேசத்தில் ஒன்பது கோள்கள் வழக்கில் இடம் பெறுகின்றன. இவற்றுள் ஏழு முக்கியம் கொண்டனவாய் கிழமைகளின் பெயராக அவற்றின் பெயர்களையே தந்திருக்கின்றனர். உலகிலுள்ள எல்லாத் தேசங்களிலுமே இந்த ஏழு கிழமைகள் அனுஷ்டானத்திற்கு எடுத்துக் கொள்ளபட்டு, அவற்றிற்கு இந்த ஏழு கிழமைகளின் பெயர்களையே தங்கள் தங்கள் மொழிகளில் வழங்கி வருகின்றனர். கோள்கள் ஒன்பதில் ஏழு மட்டும் இவ்விதம் மக்களுக்குந் தங்கள் தினசரி வாழ்க்கையில் முக்கியம் பெற்றனவாய் இருக்கின்றன. இவையே சூர்யன்-சந்திரன்-அங்கிரகன்-புதன்-குரு-சுக்ரன்-சனி ஆகிய கோள்கள் ஆகும். இவற்றுள் பலன் தருவதில் முக்கியங் கொண்டனவாய் குஜாதி பஞ்சக்கிரகங்களே மதிக்கப்படுகின்றன. சூர்யன்-சந்திரன் இவை இரண்

---

தன்னல மற்றவனாய், தொண்டில் லட்சிய முடையவனா யிருத்தல் வேண்டும்."

பாஞ்சாலத்தி லிருந்து வந்திருந்த ஒருவர்:—"கிராம சேவகன் மாதம் ஒன்றுக்கு எவ்வளவு சம்பளமாகப் பெற்றுக் கொள்ளலாம்."

அடிகள்:—"எட்டு ரூபாய் போதும்; ஆனால் 15-ரூபாய் வரை எடுத்துக் கொள்ளத் திட்டம் வகுத்துள்ளது."

வினா:—"தாங்கள் எட்டு ரூபாய் போது மென்கிறீர்கள். நான் பாஞ்சால மாகாணத்தான். என் மாகாணத்தில் பால், தயிர், நெய் யின்றி எவரும் சாப்பிடும் வழக்க மில்லை. எங்கள் சாப்பாட்டு முறைக்கு எட்டு ரூபாய் போதாது.

டும் யோர்க்ர்தி பலங்களின் நிர்ணயத்திற்கு உரியனவாக இடம் பெறவில்லை.

சூர்ய-சந்திரக்கிரகங்கள் ஒளி நிலைக்குரிய கோள்களாய்க் கரு தப்படுகின்றன். இதேபோல இருள் நிலையின் கோள்களாய் இராகு-கேதுக்கள் இருக்கின்றன. இந்த இருள்-ஒளிகளுக் கிடையில் இடங்கொளும் குஜாதி பஞ்சக்கிரகங்கள் தாம் பலன் தருவதற்குரியனவென்று கொண்டனர் போலும்! இந்தப் பஞ்சக் கிரகங்களில் புதன்-சுக்ரன் இவை இரண்டும் நாம் வசிக்கும் பூமிக்குக் கீழ்பாலும், குஜ-குரு-சனி இம் மூன்றும் மேற்பாலுமாக வரிசை பெற அமைந்துள்ளன.

சூர்ய-சந்திரர்களை இராகு-கேதுக்கள் என்னும் அரவுகள் தீண்டுவதால், அவை அந்தக் காலங்களில் நம்முடைய காட்சியினின்றும் மறைகின்றனவென்பது கிரகணங்களைப்பற்றி நம்மிடை தொன்றுதொட்டு வழங்கிவரும் கதை. ஆனால், சந்திரன்—பூமி இவற்றின் நிழல்களுக்கு நேராக சூர்ய-சந்திரர் வரும் பொழுது அந்தக் கிரகணங்கள் முறையே நிகழுகின்றன வென்பதை வான நூற் கணிதம் தெரிவிக்கிறது. இந்த நிழல்கள் ஒருவகைக் கிரமத்தில் ககோளச் சக்கரத்தில் இடம் பெற்று வரும் கணக்கை இராகு-கேதுக்களின் ஸஞ்சாரமாகக் குறிக்கப்பட்டு வருகிறது. எனவே, இந்த நிழல்கள் கோள் வரிசையில் வரும் இராகு-கேதுக்கள் அல்லவென்றும், அந்த நிழல்களுக்குப்புறம்பாகவுள்ள வேறு இரண்டு கிரகங்களே இராகு கேதுக்கள் என்றும் தெரிகிறது.

இராகு-கேதுக்களை 'சாயாக்கிரகங்கள்' — 'நிழற்கோள்கள்' என்றே இந்தியா தேசத்து வானநூற்கள் கூறுகின்றன. நிழற் கோள்கள் ஒளியின்றித் திகழ்வனவே யன்றி மேலே கூறிய நிழல்கள் அல்லவென்றும், மற்ற ஏழு கோள்களுடன் சேர்த்து 'நவக்கிரக'மாகக் கணக்கிடப் பெறுதலின், இவை இரண்டும் ஸ்தூல வடிவான கிரகங்களாய்த்தான் இருக்கவேண்டு மென்றும் தெரிகிறது. இவை ககோளச் சக்கரத்தில் யாண்டு இடம் பெற்றுள்ளது என்பதை நாம் அறிய வேண்டுவது அவசியமாகும். ஆனால், மேலைநாட்டார் சமீபத்தில் கண்ட யுரேனஸ்-நேப்டியூன்கள் தாம் இவைகளாக் இருக்கக்கூடுமோ வென்பதை நிச்சயிக்கக் கூடவில்லை.

நம் நாட்டு இன்றைய ஆராய்ச்சிக்காரர்கள் இவை இரண்டையும் ஒளி யில்லாமையால், இராகு-கேதுக்கள் என்னும் நிழற்கோள் தாம் என்கின்றனர். அத்துடன், அவர்கள் நின்று விடவில்லை. பழந்தமிழ்ப் புராணங்களுள் ஒன்று 'இலிங்க புராணம்.' அதிலிருந்து இவற்றிற்கு முறையே 'நிருதி' 'வருண' மண்டலங்களாகவும், மூன்றாவது கோளாகிய 'ப்ளூட்டோ'வுக்கு 'குபேரன்' எனவும் பெயர்களைத் தந்திருக்கின்றனர். புராணங்களுக்கு விஞ்ஞான ஆராய்ச்சி தரும் அபூர்வமான விளக்கங்களும் நம்முடைய அறிவிற்கு ஒரு நல்ல விருந்தே.

தொடர் கதை.

# தேவ தேவி

(வத்றுப்-சு. மீ. கணபதி)

(சென்ற இதழின் தொடர்ச்சி.)

"நீங்கள் தப்பர்த்தம் செய்து கொண்டீர்கள். என் தகப்பனுரை நான் கவனிக்கவில்லை என்ற வருத்தம். தவிரவும்..."

காந்தன் (இடைமறித்து), "அது யாருடைய கடமை. அவரை நாம் பட்டினி போடுகிறோமா? வேலை செய்யச் சொல்லுகிறோமா, ஒன்றுமில்லை. வேளை தவருமல் அவருக்கு வேலை செய்ய வேலைக்காரருக்குத் திட்டம் செய்திருக்கிறோம். நமக்குப் பல தொல்லைகள். அவருக்கு சாப்பிடுவது தவிர வேறு வேலை யென்ன? நாம் இதைக் காட்டிலும் நன்ருக அவரைக் கவனிப்பது என்பதின் அர்த்தம் எனக்குத் தெரியவில்லை."

"நாம் நேரிலிருந்து கவனிப்பதில்லை. அதுவே அவருடைய அந்திய காலத்தில் பெருங் குறைதானே. என் வாழ்வுக்காகத் தன் ஆஸ்தி முழுவதையுமே தத்தம் செய்திருக்கிருரல்லவா? நம்மிடமிருந்து அவர் எதை எதிர்பார்க்கப்போகிருர்? ஒன்றுமிருக்காது. நம் சுகத்தை விரும்பித்தான் செய்தார். நாம் சந்தோஷமாயிருப்பது கண்டு அவர் மனம் பூரிப்படைகிறது" என்று கூறி சிறிது நிறுத்தினுள்.

"இங்கே பார் கமலம்! வீண் துன்பத்திற்கு இடங்கொடுக்கிருய் என நினைக்கிறேன். உன் தகப்பனுருக்கு இங்கு யாதொரு குறையுமிருக்க நியாயமில்லை. உன் அண்ணன் ஏதாவது உளறிவிட்டுப் போயிருப்பான். அதை யெல்லாம் மறந்துவிடு. இப்பொழுது அவன் என்னுடைய ஆபீஸிலிருந்தால், இந்தமாதிரி எதையும் கூறும் தைரியம் அவனுக்கு இருக்காது. நான் அவனை இரண்டுதடவைகள் டிபனுக்கு அழைத்தும் அவன் மறுத்துவிட்டான். அவன் 'ஆபீஸர் சொல்லியிருந்தால் மறுத்திருக்க முடியுமா எனக் கேட்கிறேன். வேறு ஒருவராயிருந்தால் அவனுக்குத் தொந்திரவு விளைவித்திருப்பார்கள். நான் அதுமாதிரி செய்யக்கூடியவனல்ல என்பது உனக்குத் தெரியும். கிளப்புக்கு நேரமாகவில்லையா?"

"இன்று நீங்களும் கிளப்புக்குப் போவதை நான் விரும்பவில்லை. நீங்கள் நான் சொல்லவந்ததை அறியவில்லை. வாசுவுக்கு மணமாகியிருந்தால் அல்லது என் தாயார் உயிரோடிருந்தால், என் தகப்பனுர் இங்கிருக்கப் போவதில்லை. நீங்களும் அடிக்கடி ஊரிலிருக்கும் பொழுதெல்லாம் அவரைக் கண்டு பேசவேண்டும். வாசு இனிமேல் இங்கு வந்தால் அவனை என் சகோதரன் என்ற நிலைமையில் நடத்தவேண்டும். உங்கள் தகப்பனுரும், தாயாரும் இருந்தவரை நாம் எப்படி நடந்துகொண்டோமோ அப்படியே இனிமேலும் என் தகப்பனுரிடம் நடந்துகொள்ள வேண்டும். உங்கள் தகப்பனுர் அடிக்கடி என்ன சொல்வார்—'உனக்கு இந்த அந்தஸ்து கொடுத்தவர் உன் மாமனுர். என்னைப் பற்றிக் கவலையில்லை. என்னைக் காப்பாற்றும் பொறுப்பு உனக்கிருக்கிறது. அவரை மிகுந்த மரியாதையுடனும், அன்புடனும் நடத்துவதுதான் உன் நன்றியைத் தெரிவிக்கும் வழி' எனக் கூறுவார்."

"பழங்கதைகளெல்லாம் என்னத்திற்கு? நீ சொல்கிறபடியே இனிமேல் நான் நடக்கப் பிரயத்தனப்படுகிறேன். வேறு விசேஷமென்ன? இதற்காகவா கவலைப்பட்டுக்கொண்டிருந்தாய் அல்லது வேறு எதற்காகவாவது?"

"எனக்கு வேறு கவலை ஏது? நமது மனம் மாறிவிட்டது என்று நினைத்திருப்பதில் பிரயோசனமே யில்லை. இன்று முதன்முதலாக நாமிருவரும் சேர்ந்தே அவரைப் பார்க்கவேண்டும். நடையறையிலிருந்து அவரை ஹாலிலுள்ள அறைக்கு மாற்றிவிட வேண்டும். கூடியவரை அவர் சமீபத்தில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கவேண்டும். இவ்வளவு செய்தால் போதும். அவருக்கு மிக்க திருப்தி ஏற்படும்."

"இன்று எனக்கு வேலை அதிக மிருக்கிறது. நான் அவரை அப்புறம் பார்க்கிறேன். போய்வா. ஆனால் இதை நினைத்து இன்னும் கவலைப் படாதே. வாசுவை வரச்சொல்லி தந்தி அனுப்பட்டுமா? அவன் கவலைப் பட்டுக் கொண்டிருந்தாலும் அதுவும் மாறி விடும்."

"வேண்டாம்; அவன் இன்னும் சின்னாட்களில் வருவான். தகப்பனாரை இங்கிருந்து அழைத்துச் சென்று விடுவதாகக் கூறி யிருக்கிறான். அவன் வந்து ஏமாறட்டும். வந்ததும், இங்கு முற்றும் மாறியுள்ள நிலை கண்டு அவன் ஆனந்தப் படட்டும். கடிதம் கூட எழுதக்கூடாது. அவன் வருந்தி அழைத்தாலும் உங்கள் மாமனார் அவனுடன் செல்ல மறுத்து விடும்படி நாம் நடவடிக்கை எடுத்து அதில் வெற்றி பெறுதல் வேண்டும்" என்றாள். காந்தனும் சிரித்துக்கொண்டே தன் அறைக்குள் சென்று விட்டார். அங்கு சென்றதும் வேலையில் கவனம் செல்லவில்லை. கமலா கூறியவற்றிலேயே மனம் சென்றது. "அவள் கூறியது வாஸ்தவந்தான். நமக்கு என்ன பூஸ்திதி இருந்தது, இவ்வளவு பணம் கொடுத்து படிக்க அனுப்புவதற்கு. ஏதோ நமக்கும் அதிர்ஷ்ட மிருந்தது; அவரும் இஷ்டப்பட்டார். அந்தப் பணத்தையும் இந்த வேலையையும் விட கமலாவே பெரிய பொக்கிஷம் அல்லவா? அவள் கூறியதெல்லாம் எப்படி யிருப்பினும் அவள் மனம் நோகும்படி நான் நடந்து கொள்ளக்கூடாது; தவிரவும், என் தகப்பனாரிருந்த வரையில் கமலாவின் தகப்பனாருக்குத்தான் எல்லா மரியாதைகளையும் முதலில் செய்யும்படி கூறுவார். நமது தாயாரும் அப்படியே கூறி வந்திருக்கிறாள். இந்த இரண்டு வருடங்களுக்குள் எப்படியோ வேற்று மனிதனாகி விட்டேன்" என்று வெகு நாழிகை சிந்தனையி லிருந்தார். தான் செய்யப்புகுந்த வேலையையும் அவரால் கவனிக்க முடியவில்லை. மனம் சமாதானம் அடையும் பொருட்டு தன் மாமனாரிடம் சென்று உட்காரலாம் என்று புறப்பட்டார்.

காந்தன் தன் அறைக்குச் சென்றதும், கமலா தன் குழந்தையுடன் தகப்பனார் படுத்திருந்த அறைக்குச் சென்றாள். "அப்பா!" எனக் கூப்பிட்டாள். அவர் திரும்பிப் பார்த்துவிட்டுப் பேசாம லிருந்தார். "என்னை நீங்கள் மன்னித்து விடவேண்டும். உங்கள் குழந்தைதானே நான். என் அறியாத் தன்மையினால் உங்களைச் சரிவர கவனிக்கவில்லை. அதற்காக நான் மிகவும் வருந்துகிறேன். வாசு என்ன நினைத்துச் சென்றானோ என்ற கவலை தான் எனக்குப் பெரிதாகப் போய்விட்டது. இனிமேல் உங்களுக்குப் பணிவிடை செய்வதைத் தவிர எனக்கு வேறு வேலை கிடையாது. இதுவரை நான் நடந்து கொண்ட அபசாரத்திற்கு எனக்கு கடவுளிடம் மன்னிப்பு கிடைக்காது. மனம் நொந்து வியாதியில் படுத்து விட்டீர்கள் என்று இப்பொழுதான் என் மனம் கூறுகிறது. நான் எப்படி இந்தப் பாபத்தைப் போக்கிக்கொள்ளப் போகிறேன் எனத் தெரியவில்லை. தங்கள் குழந்தை நான். எனக்கு எல்லாச் செல்வத்தையும் குறைவின்றிக் கொடுத்தீர்கள். ஆனால் நான் அறிவாகிய செல்வத்தைச் சிறிது இழந்து விட்டிருந்தேன். தாங்கள் இனியும் என்னைத் தங்களுடைய மகளாகக் கருதி யிருக்கிறீர்களா? எனக்கு மன்னிப்பு உண்டா?" என்று கூறி அழுதாள்.

முதலில் அவள் தகப்பனார் ஒன்றும் புரியாமல் பார்த்துக் கொண்டிருந்தார். அதன் பின்புதான், கமலா தன் செய்கைகளுக்காக வருந்துகிறாள்

எனத் தெரிந்து கொண்டார். "குழந்தாய்! நீ எதற்காக வருந்துகிருய்? எனக்கு ஒரு குறைவுமில்லை. உன் மீது கோபமுமில்லை. நீ வருந்தாமலிருக்கவேண்டு மென்பதற்காக நான் பாடுபட்டேன். நீ சந்தோஷமா யிருப்பதைக் கண்டு நான் ஆனந்தம் கொள்கிறேன். உனக்கு ஏதாவது துன்பம் நேரிட்டு விட்டதானல் என்னல் முடிந்தால் வழி செய்கிறேன். அனாவசியமாக வருந்துவதில் பயனென்ன இருக்கிறது. நீ என் குழந்தை. அதைப் பற்றி நான் எதுவும் உனக்காகச் செய்யத் தயாராயிருக்கிறேன். உனக்கு என்ன குறை நேர்ந்தது? ஏன் வீணில் அழுகிருய்?"

"நீங்கள் எனக்கு நல்வாழ்வு தேடிக் கொடுத்திருக்கும் போது எனக்கு குறை ஒன்று மில்லை. உங்களிடம் வேறுபாடாக இது நாள் வரை நடந்து கொண்டது பற்றியே எனக்குத் துன்பம். எனக்கு அறிவு வந்தது. நான் வித்யாசமாக நடந்து கொண்டும் உங்கள் அன்பு என்பால் சிறிதும் குறையாதது என் நற்காலம். இன்று முதல் உங்கள் கட்டளைப்படிதான் நானும், மாப்பிள்ளையும் நடக்கப் போகிறோம். இந்த அறை கொஞ்சம் ஒதுக்குப்புறமா யிருப்பதால் ஹாலிலுள்ள அறைக்கு இப்பொழுதே போய்விட வேண்டும். என் நடத்தைகளுக்காக என்மீது உங்களுக்கும் கோபமில்லையே!"

"கமலா, உன் நடவடிக்கை எனக்கு விபரீதமாகத் தோன்றுகிறது. நீ சொல்வதை யெல்லாம் நம்புவதற்கு முடியவில்லை. இருந்தாலும் நீ குழந்தை தானே. உன் மேல் எனக்குச் சிறிதும் கோபம் கிடையாது. வீணில் வருந்தாதே. உன் இஷ்டப்படிதான் நான் இதுவரையிலும் நடந்து கொண்டிருக்கிறேன்; இனி மேலும் அப்படியே யிருப்பேன் என்பதில் உனக்குச் சந்தேகமே வேண்டாம். ஒரு சந்தேகம். உனக்குத் திடீரென்று ஏன் இந்த எண்ணம் உதித்தது?"

"வாசு வந்த போது அவனைச் சரிவர கவனிக்காமல் கர்வத்துடன் அவனிடம் பேசினேன். அவன் மனம் உடைந்து போய் எனக்கு அறிவு புகட்டினன். அவனிருக்கும் பொழுது, எனக்கு அவன் கூறியவற்றின் உண்மையை அறிந்து கொள்ளக் கூடவில்லை. அதன் பின்பு அறிந்தேன். நீங்கள் நான் கூறுவதை நம்பமாட்டீர்கள் எனவே நினைத்தேன். உங்கள் உத்திரவு பெற்றுத்தான் இனி எல்லா காரியங்களும் நடைபெறும்." கமலாவின் மொழிகள் அவரை ஆனந்தத்தி லாழ்த்தியது. வாசு என்ன கூறி இவள் மனதை மாற்றினனே தெரியவில்லை. இந்த அன்பையும், ஆதரவையும் நான் பெறுவேன் என நினைக்கவே யில்லையே! விதியின் விளையாட்டும், வேளையின் கூறும் போலும் என்று எண்ணிக் கொண்டே கமலாவைப் பார்த்தார். இச்சமயம் காந்தனும் வந்து அவர் சமீபம் உட்கார்ந்தார். இதைக் கண்டு கமலாவும், அவள் தகப்பனரும் பிரமித்து விட்டனர். காந்தனின் பெற்றோரிருந்த காலத்தில்கூட, சாப்பாட்டு நேரம் தவிர மீதி நேரங்களில் மாமனர் அருகில் உட்கார்ந்தவனே யல்ல. இப்பொழுது அவன் உட்கார்ந்தது இருவருக்கும் வியப்பை உண்டாக்கி விட்டது. அவன் முகத்தையே கண் கொட்டாது பார்த்துக் கொண்டிருந்தனர். பாலன் தன் பாட்டனர் பக்கத்தில் படுத்துக் கொண்டான். அவன் குழந்தை; அவனுக்கு இவர்கள் பேசிக் கொண்டதின் அர்த்தமே தெரியவில்லை. தாயாரையும், பாட்டனரையும் பார்த்தபடியே யிருந்தான்.

"உடம்பு சிறிதாவது குணமாக இருக்கிறதா? டாக்டர் அடிக்கடி வந்து பார்க்கும்படி ஏற்பாடு செய்திருக்கிறேன். என் வேலைத் தொந்திரவில் உங்களைப் பல தடவைகள் வந்து பார்த்துப் போவதற்கு சந்தர்ப்ப மிருப்பதில்லை. கூடியவரை இனிமேல் உங்களிடம் வருகிறேன். ஹாலுக்கு வந்து விட்டீர்களானல் சௌகரியமா யிருக்கும்" என்றார் காந்தன்.

## சுபாநு ஹு கார்த்திகைமீ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியாரமணி-சென்னை காலை 7-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா (வ) | க | பா | க | பா | க | பா | க | பா (வ) | க | பா | க |
| 1 | 3 | 36 | 29 | 210 | 35 | 76 | 53 | 56 | 44 | 213 | 01 | 122 | 54 | 163 | 10 | 62 | 28 | 107 | 32 |
| 2 | 3 | 40 | 26 | 211 | 28 | 88 | 51 | 56 | 27 | 214 | 36 | 122 | 59 | 164 | 10 | 62 | 24 | 107 | 29 |
| 3 | 3 | 44 | 22 | 212 | 24 | 100 | 43 | 56 | 10 | 216 | 10 | 123 | 04 | 165 | 11 | 62 | 20 | 107 | 26 |
| 4 | 3 | 48 | 19 | 213 | 20 | 112 | 36 | 55 | 52 | 217 | 45 | 123 | 09 | 166 | 13 | 62 | 16 | 107 | 22 |
| 5 | 3 | 52 | 15 | 214 | 19 | 124 | 26 | 55 | 33 | 219 | 18 | 123 | 14 | 167 | 15 | 62 | 12 | 107 | 19 |
| 6 | 3 | 56 | 12 | 215 | 18 | 136 | 17 | 55 | 14 | 220 | 52 | 123 | 18 | 168 | 17 | 62 | 08 | 107 | 16 |
| 7 | 4 | 00 | 08 | 216 | 17 | 148 | 23 | 54 | 54 | 222 | 30 | 123 | 22 | 169 | 19 | 62 | 04 | 107 | 13 |
| 8 | 4 | 04 | 05 | 217 | 16 | 160 | 30 | 54 | 34 | 224 | 08 | 123 | 26 | 170 | 22 | 62 | 00 | 107 | 10 |
| 9 | 4 | 08 | 01 | 218 | 15 | 173 | 12 | 54 | 13 | 225 | 36 | 123 | 30 | 171 | 25 | 61 | 56 | 107 | 06 |
| 10 | 4 | 11 | 58 | 219 | 14 | 185 | 54 | 53 | 52 | 227 | 04 | 123 | 33 | 172 | 29 | 61 | 52 | 107 | 03 |
| 11 | 4 | 15 | 54 | 220 | 13 | 199 | 18 | 53 | 31 | 228 | 37 | 123 | 37 | 173 | 33 | 61 | 48 | 107 | 00 |
| 12 | 4 | 19 | 51 | 221 | 12 | 212 | 43 | 53 | 09 | 230 | 10 | 123 | 40 | 174 | 37 | 61 | 43 | 106 | 57 |
| 13 | 4 | 23 | 47 | 222 | 11 | 226 | 44 | 52 | 47 | 231 | 42 | 123 | 43 | 175 | 42 | 61 | 39 | 106 | 54 |
| 14 | 4 | 27 | 44 | 223 | 10 | 240 | 46 | 52 | 24 | 233 | 15 | 123 | 46 | 176 | 47 | 61 | 34 | 106 | 51 |
| 15 | 4 | 31 | 41 | 224 | 09 | 255 | 02 | 52 | 02 | 234 | 47 | 123 | 49 | 177 | 52 | 61 | 30 | 106 | 48 |
| 16 | 4 | 35 | 37 | 225 | 08 | 269 | 18 | 51 | 39 | 236 | 19 | 123 | 52 | 178 | 57 | 61 | 25 | 106 | 44 |
| 17 | 4 | 39 | 34 | 226 | 07 | 283 | 35 | 51 | 16 | 237 | 50 | 123 | 54 | 180 | 03 | 61 | 21 | 106 | 41 |
| 18 | 4 | 43 | 30 | 227 | 06 | 297 | 52 | 50 | 53 | 239 | 22 | 123 | 56 | 181 | 09 | 61 | 16 | 106 | 38 |
| 19 | 4 | 47 | 27 | 228 | 05 | 311 | 57 | 50 | 30 | 240 | 54 | 123 | 58 | 182 | 15 | 61 | 11 | 106 | 35 |
| 20 | 5 | 51 | 23 | 229 | 04 | 326 | 03 | 50 | 07 | 242 | 25 | 124 | 00 | 183 | 21 | 61 | 06 | 106 | 32 |
| 21 | 4 | 55 | 20 | 230 | 03 | 339 | 53 | 49 | 15 | 243 | 56 | 124 | 02 | 184 | 28 | 61 | 02 | 106 | 29 |
| 22 | 4 | 59 | 17 | 231 | 02 | 353 | 44 | 49 | 22 | 245 | 27 | 124 | 03 | 185 | 35 | 60 | 57 | 106 | 25 |
| 23 | 5 | 03 | 13 | 232 | 01 | 7 | 16 | 49 | 00 | 246 | 57 | 124 | 04 | 186 | 42 | 60 | 52 | 106 | 22 |
| 24 | 5 | 07 | 10 | 233 | 00 | 20 | 48 | 48 | 37 | 248 | 27 | 124 | 05 | 187 | 50 | 60 | 47 | 106 | 19 |
| 25 | 5 | 11 | 06 | 233 | 59 | 33 | 56 | 48 | 16 | 249 | 56 | 124 | 06 | 188 | 57 | 60 | 42 | 106 | 16 |
| 26 | 5 | 15 | 03 | 234 | 58 | 47 | 04 | 47 | 54 | 251 | 26 | 124 | 07 | 190 | 05 | 60 | 37 | 106 | 13 |
| 27 | 5 | 18 | 59 | 235 | 57 | 59 | 43 | 47 | 33 | 252 | 53 | 124 | 08 | 191 | 13 | 60 | 32 | 106 | 09 |
| 28 | 5 | 22 | 56 | 236 | 54 | 72 | 23 | 47 | 11 | 254 | 21 | 124 | 08 | 192 | 21 | 60 | 27 | 106 | 06 |
| 29 | 5 | 26 | 53 | 237 | 55 | 84 | 34 | 46 | 51 | 255 | 47 | 124 | 08 | 193 | 29 | 60 | 22 | 106 | 03 |
| | | | | | | | | | | | | (வ) | | | | | | | |
| 30 | 5 | 30 | 49 | 238 | 54 | 96 | 46 | 46 | 30 | 257 | 13 | 124 | 08 | 194 | 38 | 60 | 17 | 106 | 0[illegible] |

**ஆகாயக் காட்சி:**—4உ பின் இரவு மணி 2-58க்கு சசிக்குத் தெற்கில் [illegible] கலை இடத்தில் குருவும், 8உ முன் இரவு மணி 11-10க்கு சசிக்குத் தெற்[illegible] பாகை 3ல் சுக்ரனும் சந்திர சமாகமம்.

**பிரவேசங்கள்:**—16உ முன் இரவு மணி 5-54க்கு சுக்ரன் கன்னியிலிருந்[illegible] துலாத்திற்கும், 18உ மாலை மணி 6-42க்கு புதன் விருச்சிக மிருந்து தனுவி[illegible] கும் பிரவேசமாகின்றன.

18உ புதன் பஸ்சாத் (மேற்கில்) உதயம். 30உ குரு வக்ராரம்ப[illegible] இம்மாதம் முழுவதும் பாநுமத்யம்.

---

* அயனும்சம் பா-22 கலை-56 விகலை 28.3209 கூட்ட சாயன ஸ்புடம் வரும்.

† [illegible] ராசி அல்லது பாகை 180 கூட்ட கேது ஸ்புடம் வரும்.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

சுபானுஸு கார்த்திகைமீ கலியுகாதி 5045, சாலிவாகனம் 1866
பசலி 1353, கொல்லமாண்டு 1119, ஹிஜிரா 1362

இங்கிலீஷ் 1943ஸு நவம்பர்மீ—1943ஸு டிசம்பர்மீ

| கார்த்திகை | நவம்பர் மீ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | செவ் | சது 4-11 | திரு15-36 | ம15-36சி | விஷ்ணுபதி புண்ய காலம் |
| 2 | 17 | புத | பஞ்7-24 | புன20-55 | சித்60 | விவாகாதிகள் |
| 3 | 18 | வியா | சஷ்12-41 | பூச27-03 | அ27-03சி | நவக்கிரக சாந்தி செய்ய |
| 4 | 19 | வெள் | சப்18-10 | ஆ33-37 | மர60 | கால பைரவாஷ்டமி - கால பைரவ ஜயந்தி |
| 5 | 20 | சனி | அ23-23 | மக39-35 | அ39-35சி | இந்திரா சாவர்ணி மனு |
| 6 | 21 | ஞா | நவ28-12 | பூர46-12 | சி46-12அ | ஆராய்ச்சி வேலைகள் |
| 7 | 22 | திங் | தச32-27 | உத்51-33 | சித்60 | கரிநாள் சுபம் விலக்க |
| 8 | 23 | செவ் | ஏ35-56 | அ55-47 | சித்60 | சர்வஏகாதசி, உற்பத்திஏகா |
| 9 | 24 | புத | து38-25 | சித்58-51 | சித்60 | விவாகாதி சுபகரங்கள் [தசி |
| 10 | 25 | வியா | திர39-37 | சு60-00 | அமி60 | பிரதோஷம், மாச சிவராத்ரி யமதீபம், திருதினஸ்பிருக் |
| 11 | 26 | வெள் | சசி39-03 | சு0-33 | சித்60 | பத்மஜப புண்ய தீர்த்தம் |
| 12 | 27 | சனி | ●37-10 | வி1-48 | சித்60 | **அமாவாஸ்யை விரதம்** |
| 13 | 28 | ஞா | பிர34-12 | அ1-13 கே59-25 | ம59-25அ | |
| 14 | 29 | திங் | துதி30-36 | மூல57-07 | சி57-07ம | |
| 15 | 30 | செவ் | திரு26-24 | பூர53-56 | சி53-56பி | |
| 16 | 1 | புத | சது21-37 | உத்50-25 | அ50-25சி | |
| 17 | 2 | வியா | பஞ்16-10 | திரு46-13 | சித்60 | |
| 18 | 3 | வெள் | சஷ்10-13 | அ42-07 | சித்60 | |
| 19 | 4 | சனி | சப்4-17 அ58-15 | சத37-48 | அ37-48ம | |
| 20 | 5 | ஞா | நவ52-50 | பூ34-10 | சி34-10அ | பிரளய கல்பாதி |
| 21 | 6 | திங் | தச48-05 | உட்31-17 | சித்60 | சத்தியாநிதி தீர்த்த புண்ய தி |
| 22 | 7 | செவ் | ஏ43-47 | ரே28-13 | சித்60 | சர்வ ஏகாதசி [னம் |
| 23 | 8 | புத | துவ40-51 | அசு26-25 | ம26-25சி | பரணி தீபம், ருத்ர தீபம் |
| 24 | 9 | வியா | திர37-10 | பர25-10 | சி25-10ம | அருணாசல தீபம், **கிருத்திகை விரதம்**, பிரதோஷம் |
| 25 | 10 | வெள் | சசி38-23 | கி✲24-37 | சி24-37ம | பாஷாண சதுர்தசி |
| 26 | 11 | சனி | ப○38-20 | ரோ27-04 | அ27-04சி | பௌர்ணமி சந்திர பூஜா |
| 27 | 12 | ஞா | பிர39-37 | மிரு30-11 | சித்60 | மார்க்க சீர்ஷ பகுளம் |
| 28 | 13 | திங் | துதி42-33 | திரு34-13 | சி34-13அ | மந்திரார்த்தங்கள் [ள் |
| 29 | 14 | செவ் | திரு46-50 | புன39-07 | சித்60 | கணிதம்-ஆராய்ச்சி வேலைக |
| 30 | 15 | புத | சது51-40 | பூச44-56 | சித்60 | சங்கட சதுர்த்தி சாபரவிஜா-57, வி-26 |

(1943ஸு டிசம்பர்மீ)

| | | | |
|---|---|---|---|
| | | செவ் | சனி |
| கே | 16-து-சுக் 18-தனு-புத 30-வக்-புத | | ராகு / குரு |
| | சூரி புத | | சுக் |

**Edited, Printed & Published by N. Munisawmy Mudaliar,**
**At The " Ananda Bodhini " Press,**
**No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Madras.**

# பூவுலக வாழ்க்கைக்கு இன்றியமையாத சிங்கபலத்தைத் தருவதெது?

முறையாய் செய்த அயக்காந்த செந்தூரத்தைக்காட்டிலும் தேகபலத்தைத் தரும் ஔடதம் வேறொன்றுமில்லை.




**விளம்பரம்.**

**இதைக் கண்ணுறும் கனவான்களே!** இந்த லேகிய செந்தூரங்கள் சாமான்யமானவையல்ல. அபாரமான பலத்தைத் தரக்கூடிய சக்தி அமைந்துள்ளவை. உறுதியாய் இவற்றை நம்பி வாங்கிச் சாப்பிட்டால் ஒரு தடவையிலேயே இவற்றின் குணம் நன்கு விளங்கும்.

தற்சாலத்தில் மனிதரின் பால்ய சேஷ்டையாலும், இரத்தப் போக்காலும் அவர்க்கு உண்டான 20-வகை ரோகங்கள், சூலைரோகம், குன்மரோகம், பித்தபாண்டு, கை கால் முடக்கு, ஓடுவாய்வு, பித்த எப்பம், நெஞ்சு தொண்டை எரிச்சல், வயிற்றுப்பிசம், அஜீரணம், பசியில்லாமை, தாது ஹீனம், தேக உளைச்சல், கண்ணில் நீர்வடிதல், சோம்பல், நித்திரை யில்லாமை, தலை சுழற்றல், நீர் இறங்கும்போது பொறுக்க முடியாத பாதையைத் தரும் தந்திமேகம் முதலியவைகள் ஆச்சரியப்படத்தக்க விதமாய் நீக்கிவிடும். பயங்கரமான மேக சம்பந்த வியாதிகளைப் பத்தே வேளையில் போக்கி சப்த நரம்புகளுக்கும் முருக்கேற்றி அபரிமிதமான இரத்த விருத்தியைப் பெருக்கிப் பலத்தைத் தருவதில் இதற்கு மிஞ்சின லேகிய பஸ்பம் வேறெங்குமில்லை என்று நாம் உறுதியாகச் சொல்வோம். இதல்லாமல் தேகத்தை புஷ்டியாக்கித் தேகத்தடிப்பு, நகக்கண் வெளுத்திருத்தல் முதலிய வியாதிகளைக் கண்டித்து, தினந்தோறும் மலத்தைத் தாராளமாய்ப் போக்குவதில் இந்த லேகிய செந்தூரங்களே முதன்மையானவை யென்பதே யாம் எமது அனுபவத்தில் கண்டிருக்கிறோம். நிற்க,

இந்த லேகிய செந்தூரங்கள், மேற்கண்ட வியாதிகளைக் கண்டிப்பாய் நிவர்த்திக்குமா என்னும் சந்தேகமுடையோர் பரீக்ஷார்த்தமாக முதலில் 48-நாளாவது வாங்கி யுண்டால் இவற்றின் அபாரகுணம் தெரியவரும். தவிர, யாங்கள் இம் மகத்துவம் பொருந்திய லேகிய செந்தூரங்களை எவ்வளவு சிறப்பித்துக் கூறியபோதிலும் அது தகும். மேலும் இவற்றை நோய் உள்ளவர்கள் தாம் சாப்பிடவேண்டும் என்ற அவசியமில்லை: யாவரும் சாப்பிடலாம். நோய் உள்ளவர்களைவிட நோய் இல்லாதவர்கள் எண்ணிக்கையாக 48-நாள் லேகிய செந்தூரங்களை யாதும் பத்தியமின்றிச் சாப்பிட அவர்க்கு நல்ல பலம் ஏற்படும்: இது தவறாது. இவற்றைத் தருவித்து நீங்கள் எண்ணிக்கையாக 10-நாளைக்குச் சாப்பிட்டால் அவற்றின் குணம் உங்களுக்கு நன்ருய்த் தெரியும்.

இந்த லேகிய செந்தூரங்களுக்குப் பத்தியமே கிடையாது. எந்தப் பண்டங்களையும் நீக்குதலின்றி மருந்து சாப்பிடும் காலத்தில் வயிற்றுக்குத் துரோகம் செய்யாமல் சாப்பிடலாம். இவற்றைச் சாப்பிடும்போது பசி அதிகமாய் எடுக்கும். ஆதலால் பச்சைப்பயற்றுக் குழம்பு தயிர், பால், கறி, மார்கண்ட சூப்பு, நெய் இவைகளை அதிகமாய்ப் பசியைத் தணிக்கக்கூடிய விதமாகத் தாமதம செய்யாமல் சாப்பிட்டு வரவேண்டியது. இவற்றைப் புசிக்கும்போ தெல்லாம் பலகாராதிகள் சாப்பிடல் வேண்டும். தயிர், பால், நெய், முதலியவைகள் எவைகளா யிருந்தாலும் சந்தேகமின்றிச் சாப்பிட்டு வரலாம்.

இந்தியா, ஸிலோன் ஆகிய உள்நாடுகளுக்கு 24-நாள் சாப்பிடக்கூடிய லேகியமும் செந்தூரமும் விலை ரூ. 1—12—0. போஸ்டேஜ் அணு 7. ஒரே தடவை 48-நாள் மருந்து வாங்குவோருர்கு தபாற்கூலி உள்பட ரூ. 4.

ஸிலோனில் உள்ளோர் முழு தொகையையும் முன் பணமாக மணி ஆர்டர் அனுப்பி பெற்றுக் கொள்ளவும். முன் பணமின்றி வி. பி. யில் அனுப்பப்படமாட்டாது.

---

விலாசம்:—லேகியம் டிபோ,

44, நம்புலையர் தெரு, மதராஸ்.

---

## [illegible]சீனிபிந்து



காதில் சீழ் வடிதல், காது குத்தல், காது கேளாதிருத்தல், காதில் நமைச்சல் முதலிய வியாதிகளுக்கு இந்த மருந்தில் 2-துளி காலை மாலைகளில் காதில் விட்டு வர, காதிலுள்ள நோய்களெல்லாம் நீங்கி விடும்.

புட்டி 1-க்கு அணு . 4 வி. பி. தபால்கூலி வேறு.

## (காட்லீவர் ஆயில்) மீன் எண்ணெய்

இது பலத்தை உண்டாக்குகிறது. தவிர இரும்பலினால் உண்டாகும் இளைப்பையும் அடக்கும். இளைத்தவர்கள் உபயோகித்தால் தேகம் புஷ்டியாகும், இரத்தத்தைச் சுத்தி செய்யும், சுவாசகாசங்களின் ரோகத்தை குணப்படுத்தும், சரீரத்தினுடைய ஒவ்வொரு பாகத்துக்கும் பலத்தைக் கொடுக்கும். இதைக் குழந்தைகளுக்கும் கொடுக்கலாம். புட்டி 1-க்கு விலை ரூபா 1—8—0.

---

தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

# நாராயண சஞ்சீவித் தைலம்

இத்தைலம் முழுவதும் பச்சிலைகளாலும், பசும்பால் முதலிய சிரேஷ்டமான வஸ்துக்களாலும் ஆயுர்வேத முறைப்படி மிகப் பரிசுத்தமாகத் தயார் செய்யப்பட்டது. இத்தைலத்தில் ஸ்நானம் செய்வதினுல் தலைவலி, ஒற்றைத் தலைவலி, மண்டையிடி, மண்டைக்குத்தல், கண் எரிச்சல், கண்களில் நீர் வடிதல், சாலேஸ்வரம், காதுநோய், தலைபாரம், அதிக வெய்யிலினுல் உண்டாகும் சிரரோகங்கள், சரீரதாபம், மூளைக்கொதிப்பு முதலியவைகள் ஆச்சரியப்படும் விதமாய்த்தீரும். தொடர்ச்சியாய்ச் செய்துவரும் இதன் ஸ்நானங்களினுல் நரைத்த மயிர் கருத்து விடும். மூளையைக் குளிரப்பண்ணி அறிவையும் திடச் சித்தத்தையும் உற்சாகத்தையும் உண்டு பண்ணுவதில் இது நிகரற்றது. சாராய சத்து முதலிய ஆங்கில வாசனைகள் இதில் சேர்க்கப்படவில்லை. சுத்தமான பச்சிலை, கிழங்கு புல் முதலிய இந்திய வாசனைகளே சேர்க்கப்பட்டிருக்கின்றன. தினம், இதனைத் தலையில் தடவி வாரி வருவதினுல் மயிர் கருப்புப் பட்டைபோல் பளபளப்பாகக் கருத்து ஆலம் விழுதுபோல் நீண்டு வளரும். இன்னும் இது, உஷ்ணத்தைத் தணித்து ஞாபக சக்தியையும், முகவசீகரத்தையும் உண்டாக்கும். கஷ்டப்பட்டு வேலை செய்தவர்களும் வெகுதூரம் நடந்தவர்களும் படுக்கும்போது சிறிது தைலத்தை உள்ளங்கை உள்ளங்கால்களில் தேய்த்துக்கொண்டால் காலையில் எழுந்திருக்கும்போது திரேகம் ஆரோக்கியமாய் இருக்கும். 5 பலம் டின் 1-க்கு ரூபா 1. தபால் சார்ஜ் பிரத்தியேகம்.





# கூந்தல் வளரும் துளி

இதை நல்லெண்ணெய் அல்லது தேங்காய்யெண்ணெயில் கலந்து பிரதிதினம் மயிருக்குப் பூசிவந்தால் கூந்தலானது ஆலம் விழுதுபோல் உண்மையாய் வளரும். அதில் பேன் சேராது: சுண்டு உண்டாகாது; மயிர் உதிராது. வழுக்கை விழுந்த இடத்திலும் மயிர் முளைக்கும்.

புட்டி 1-க்கு அணு 12. தபாற்கூலி வேறு.

# ருதக நிவாரணி மாத்திரை



ஸ்திரீகளுக்கு மாதாந்திர பஹிஷ்டை (ருது) கிரமமாக வெளிப்படாமல் காலந் தவறி வெளிப்படுதல், சிலகாலம் வெளிப்படாமலேயிருத்தல், வயிற்றுவலி, ஜுரம், மார்பு நோய், மயக்கம், கழுத்திசிவு, ஜன்னி தோஷங்கள், மஞ்சட் காமாலை, உணர்ச்சியின்றி சிறுநீர் பெருக்கெடுத்தல், மூர்ச்சையாகுதல், மார்பு படபடவென்று அடித்துக்கொள்ளுதல், மேல்மூச்சு வாங்குதல், மர்மஸ்தானத்தில் பொறுக்கமுடியாத வேதனை உண்டாகுதல் இன்னும் மாதர்களுக்குக் காணும் ருது சம்பந்தமான எல்லா வியாதிகளையும் கண்டித்து கருப்பகோசத்தைச் சரிப்படுத்திச் சந்தான விருத்தியை உண்டாக்கும்.

ஒரு டப்பி மாத்திரை விலை ரூபா 1.

---

**தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**

| | ரூ. | அ. |
|---|---|---|
| [illegible] 5-பாகம் | 9 | 10 |
| கற்பக[illegible]லையின் அற்புதக் கொலை ... | 1 | 4 |
| கடற்கொள்ளைக்காரன் 2பாகம் | 3 | 4 |
| மதனம்பாள் 2-பாகம் ... | 3 | 0 |
| லோகநாயகி ... | 1 | 0 |
| விளையாட்டுச் சாமான் ... | 1 | 6 |
| பவ்ளத்தீவு 2-பாகங்கள் ... | 3 | 0 |
| தபால்கொள்ளைக்காரர்கள் ... | 0 | 14 |
| அமராவதி 2-பாகங்கள் ... | 4 | 0 |
| மஞ்சள் அறையின் மர்மம் ... | 1 | 8 |
| கற்கோட்டை ... | 2 | 0 |
| பூங்கோதை ... | 0 | 10 |
| வீரநாதன் ... | 0 | 12 |
| கனகபூஷணம் 2-பாகமும் ... | 3 | 8 |
| கமலசேகரன் ... | 1 | 12 |
| தினகரசுந்தரி ... | 1 | 0 |
| ரத்தினபுரிரகசியம் 9-பாகமும் | 18 | 2 |
| சந்திராபாய் ... | 2 | 0 |
| இராஜாமணி ... | 2 | 0 |
| இரத்தினபாய் ... | 1 | 12 |
| மதனபூஷணம் ... | 1 | 0 |
| சுவர்ணம்பாள் ... | 0 | 12 |
| தேவசுந்தரி ... | 1 | 4 |
| குணசுந்தரன் ... | 0 | 12 |
| பத்மாஸனி ... | 0 | 14 |
| ஆனந்தஸிங் ... | 2 | 0 |
| மின்சார மாயவன் ... | 1 | 8 |
| ஆனந்தசிங்கின் அஷ்டஜயங்கள் | 1 | 12 |
| அசூர் இலக்ஷ்மணன் ... | 2 | 0 |
| கைவல்லிய நவநீத வசனம் ... | 1 | 8 |
| சகோதரவாஞ்சை ... | 0 | 7 |

---

| | ரூ. | அ. |
|---|---|---|
| தத்வசங்க்ரஹ ராமாயணம் ... | 4 | 0 |
| ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சருடைய சரித்திரமும் உபதேசங்களும் | 1 | 12 |
| விவேகானந்தர் ... | 4 | 0 |
| தமிழ் மெடீரியா மெடிகா ... | 3 | 0 |
| மாதவி மாதவன் 2-பாகம் ... | 2 | 0 |
| மலையாள பகவதி ... | 1 | 0 |
| அற்புத நவநீத ரம்பை ... | 1 | 0 |
| அகட விகட விலாச விநோதம் | 0 | 10 |
| சீமாட்டி கார்த்தியாயினி ... | 0 | 12 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| துயராளன் கதை ... | 0 | 12 |
| பூலோக லக்ஷ்மி கதை ... | 0 | 10 |
| கனகரத்தினம் ... | 0 | 8 |
| கண்டிராஜா நாடகம் ... | 0 | 12 |
| நளின சுந்தரி ... | 0 | 10 |
| கம்பராமாயணவசனசங்கிரகம் | 2 | 0 |
| குசேலோபாக்கியான வசனம் | 1 | 0 |
| ஸ்ரீபாலன் ... | 0 | 8 |
| உதயணன் ... | 0 | 7 |
| தசக்கிரீவன் ... | 0 | 14 |
| போஜ சரித்திரம் ... | 0 | 5 |
| சதானந்தர் ... | 1 | 4 |
| ஜீவகன் வசனம் ... | 1 | 0 |
| கர்ணன் சரிதை ... | 0 | 12 |
| பீஷ்ம விஜயம் ... | 0 | 10 |
| கீர்த்திசிங்கன் ... | 0 | 8 |
| முப்பெருந்தாசர் ... | 0 | 10 |
| அரிச்சந்திரன் சரிதை ... | 0 | 8 |
| நீலக்கொடி ... | 0 | 5 |
| மணவாளன் ... | 0 | 3 |
| பரசுராமன் ... | 0 | 3 |
| சிசுபாலன் ... | 0 | 8 |
| அங்கதன் ... | 0 | 4 |
| தசாவதாரம் ... | 0 | 6 |
| கிருஷ்ணன் தூது வசனம் ... | 0 | 8 |
| சண்டோபாக்யானம் ... | 0 | 6 |
| கருணைகரரும் சத்தியசீலரும் | 0 | 8 |
| சத்தியவசனி ... | 0 | 4 |
| விமலன் ... | 0 | 4 |
| கண்ணபிரான் ... | 0 | 4 |
| செய்யுட்பாடத்திரட்டு ... | 0 | 4 |
| நாலுமந்திரி கதை ... | 0 | 4 |
| மங்களேசுவரன் ... | 0 | 6 |
| தக்கன் ... | 0 | 6 |
| சீமந்தனி ... | 0 | 8 |
| நான்குகோடி ... | 0 | 4 |
| மதிமோசவிளக்கம் ... | 1 | 0 |
| மெய்க்காதலி ... | 0 | 8 |
| மேனமினுக்கி கதை ... | 0 | 8 |
| வீணைகானன் ஞானேந்திரி ... | 0 | 8 |
| மனோன்மணி கதை ... | 0 | 8 |
| கோமளவல்லி கதை ... | 0 | 8 |
| விகடவல்லி கதை ... | 0 | 6 |
| தாலிகட்ட மறந்த கதை ... | 0 | 5 |

**இந்திர கவசமென்னும் சர்வ தேவதா வசியம்**
முதல் பாகமும் இரண்டாம் பாகமும் சேர்ந்தது. **விலை ரூபா 1.**

---

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.**

## சர்வமேக நிவாரணத் தைலம்




இந்தப் பிரசித்திபெற்ற இராஜ சஞ்சீவி திராவகத்தை, காலை மாலை இரண்டு வேளைகளிலும் 10-நாட்கள் வரை உட்கொண்டால் வெகு நாட்களாகத் தேகத்தில் ஊறிய மேக ரோகங்கள், மேக வாயு, தனுர்வாதம், முழங்கால் வாதம், குதிகால் வாதம், சகலமான தடிப்புகள், மேகரோகத்தால் உண்டான வெடிப்பு இரணங்கள், குழிப் புண்கள், புரையோடுகிற புண்கள், திமிர் வாய்வு, கைகால் விரல்களில் மேகநீர் தங்கிய நோய்கள், கிரந்தி முதலிய கிரந்திப் புண்கள், துடைவாழை படைகள், நகக்கணுநோய், சகல மூலங்கள் முதலிய ரோகங்கள், நெருப்பிலிட்ட பஞ்சு போல் போகும். இது அநேக ஜனங்களின் துன்பத்தை நீக்கிச் சௌக்கியத்தை உண்டு பண்ணி அதிக அனுபவத்திற்கு வந்தது. கடின பத்தியமின்றி, பால், நெய், கறி முதலியவைகளுடன் சாப்பிடக்கூடியதும், தேக இளைப்பு, ஆயாசம் முதலியவைகளை உண்டாக்காமல் சுகமாக்கி வியாதிகளைக் கண்டித்துச் சுகப்படுத்தக்கூடியதுமாகிய உண்மையான மருந்து.

இதன் விலை ரூபா 1—8—0. தபாற்கூலி வேறு.

## எலிக்ஸ்ரைன்

மேகரோக நிவாரணி!
தாது விருத்திக்கு நிகரற்றது!!

மலையாள அஷ்டாங்க முறைப்படி மலையாளத்தில் தயார் செய்தது.

பத்தியம் கிடையாது. ருசிகரமானது. இரத்த சுத்திக்கும் இரத்த விருத்திக்கும், தசை விருத்திக்கும், தாது பலத்திற்கும் இது ஒரு அமிர்த சஞ்சீவியாகும். நாள்பட்ட வெள்ளை, வெட்டை, மேகவியாதி, துர்நீர், மூலச்சூடு, நரம்புத் தளர்ச்சி, வீரியக் குறைவு, லிங்கப்புண், லிங்கப் புற்று, மேகப் படைகள், உடம்பு ஊரல், அஜீரணம், மலச்சிக்கல், கைகால் நோவு, மயக்கம், இடுப்பு வலி, மூத்திரநோய் முதலிய எல்லாவிதமான மேக வியாதிகளைப் போக்கி, புத்துயிர் அளித்து இல்லற இன்பத்தை அனுபவிக்கச் செய்து, யௌவனத்தைத் தரும். ஆண் பெண் யாவரும் சாப்பிடலாம்.

**20-நாள் மருந்து 40-வேளைக்கு (பூரண குணத்துக்குப் போதுமானது) ரூபா 2-4-0**

## குன்மக் குடாரி

ஸ்டமக் பவுடர்:
ஆபரேஷன் தேவையில்லை:

சகலவித வயிற்றுவலியையும் **Appendicitis** என்னும் வயிற்றிலுண்டாகும் வியாதியையும், புண்களையும், வயிற்றை ஆபரேஷன் செய்யாமல் இம்மருந்து உத்தரவாதத்துடன் குணப்படுத்தும். இம்மருந்து மலையாள அஷ்டாங்க முறைப்படி தயார் செய்தது. (அல்சர்), அஜீரணம், மலபந்தம், குடலிரைச்சல், புளியேப்பம், வயிற்றுக்குத்தல், குடல்புண், ரணம், சதை வளர்தல், குலைக்கட்டி, ஈரலில் சதை வளருதல், குன்மம், சாப்பிடும் முன்னும் பின்னும் வயிற்றில் உண்டாகும் வலி இன்னும் பலவிதமான வியாதிகளையும் குணப்படுத்தும்.

**30-நாள் 60-வேளை மருந்து விலை ரூபா 2-8-0**

---

**விலாசம்:-தனலட்சுமி கம்பெனி, தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.**

Edited, Printed and Published by N. MUNISAMI MUDALIAR, at the "ANANDA BODHINI PRESS," No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Sowcarpet, Madras.